# செந்தமிழ்ச் செல்வி

## உள்ளுறை

## 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

க. டாக்டர் ந. சஞ்சீவி, எம். ஏ., பிஎச்.டி.
தமிழ்த்துறைத்தலைவர், சென்னைப் பல்கலைக்கழகம்

உ. 'சித்தாந்த கலாநிதி', உரைவேந்தர்,
ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை, மதுரை.

ங. திரு. கொண்டல், சு. மகாதேவன், எம். ஏ., பி. எஸ்ஸி.
இயக்குநர், தமிழகவரசு தமிழ் வளர்ச்சித்துறை, சென்னை

ச. செஞ்சொற்கொண்டல், வித்துவான்,
டாக்டர் சொ. சிங்காரவேலன், எம்.ஏ., டிப். லிங்., பி.எச்.டி.,
மாயூரம்

ரு. டாக்டர் எஸ். வி. சுப்பிரமணியம், எம்.ஏ., பிஎச்.டி.
இயக்குநர், உலகத்தமிழ் ஆராய்ச்சி மன்றம், சென்னை.

சா. புலவர் இரா. இளங்குமரன், கலைமைத் தமிழாசிரியர்,
மு. மு. உயர்நிலைப்பள்ளி, திருநகர், மதுரை-6

எ. திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.
நூலகர், மறைமலையடிகள் நூல்நிலையம், சென்னை.

---

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| | | |
|---|---|---|
| சிலம்பு ருந | திருவள்ளுவர் ஆண்டு உ00௯, ஐப்பசி நவம்பர் 1978 | பரல் ௩ |

## ஆக்கப் பணிகளும் அறிஞர்கள் கடமையும்

உலகில் மாந்த இனம் முதன்முதலாகத் தோன்றி வளர்ந்து நாகரிகமுற்றுச் சிறந்த நிலப்பகுதி குமரிக்கண்டமே என்பதும், உலக முதற் செம்மொழி நம் அருமைத் தாய்மொழியாகிய தமிழே என்பதும் நிலவியல், உயிரியல், மாந்தவியல் முதலிய பல்துறைப் பேரறிஞர்களாலும் அசைக்க முடியாத பேருண்மைகளாக மலைமேல் அரணென நிலைபெறுத்தப்பட்டிருக்கின்றன. சிந்துவெளி-அரப்பா மொகஞ்சதரோ அகழ்வாராய்ச்சிகளால் உலகின் மிகப் பழைமையான நாகரிகம் தமிழருடையதே என்பது தெளிவுறுத்தப்பட்டிருக்கின்றது; தொடர்ந்து நடைபெற்றுவரும் ஆராய்ச்சிகளால் மேற்கூறிய உண்மைகள் உறுதிப்படுத்தப்படுகின்றன; அண்மையில் உருசிய நாடு, பின்லந்து நாடுகளின் பேரறிஞர்களும் மெய்ப்பித்துள்ளனர். அழுக்காறுற்ற நெஞ்சினர் ஆராய்ச்சித் துறைகளில் இடம் பற்றிக்கொண்டு உண்மைகளை மறைக்க எத்துணை முயற்சி செய்யினும் அவை உருத்தெரியா தொழிகின்றமை கண்கூடு.

குமரிக்கண்டம் கடல்கோளால் அழிவுற்ற பின்னர் இற்றைக் குமரிமுனைக்கும் வேங்கடமலைக்கும் இடைப்பட்ட நிலப்பரப்பே தமிழ் வழங்கும் இடமாகக் குறுகிவிட்டது. அன்றியும், ஆங்காங்கு உள்ள சூழலுக்கேற்பப் பேச்சு வழக்கில் நேர்ந்த பலுக்கல் (உச்சரிப்பு) வேறுபாட்டானும், வேற்றினத்தவர் நுழைந்து தம் வல்லாண்மையைப் பெருக்கிக் கொண்டமையானும், அவர்கள்தம் திறமார்ந்த விரகாண்மையாலும் சிதைவுபட்ட தமிழினின்று பல் வேறு மொழிகள் கிளைத்தன. தமிழ் இலக்கண இலக்கியங்கள் அழிக்கவும் குறைக்கவும் மறைக்கவும்பட்டுப் போயின. தமிழ் தமிழ்மக்களாலேயே புறக்கணிக்கப்படும் இழிநிலையும் உருவாயிற்று.

ஒருமொழி பேசி ஒன்றுபட்டு வாழவேண்டிய தமிழினம் அயலின நுழைவுக்கும் அயன்மொழிக் கலப்புக்கும் இடனளித்துத் திரவிடராய்த் திரிபுற்று மாறுபட்டும் மலைந்து நின்றும் சீரழியும் நிலை எய்திற்று.

தமிழ் தன்னிடத்தினின்றும் பல்வேறு மொழிகளைத் தோற்றுவித்தும் தான் அழியாமல் இருப்பதாக நாம் பெருமை பேசிக்கொண்டாலும், அதன் பின்னணியில் தமிழினத்தின் மாபெரும் வீழ்ச்சியும் மறைந்து கிடக்கின்றது. என்பது சற்று ஆழ்ந்து எண்ணிப் பார்ப்பின் புலனாகும்.

தமிழ் இயற்கை மொழியாதலின் நாளடைவில் அதன் இடப்பரப்பு சுருங்கினும் நலச்சிறப்பு குன்றாது இன்றுகாறும் உயிரோடு உலவி வருகின்றது; தமிழினமும் ஒருவாறு நிலவிவருகின்றது.

அடிமைப்பட்டு அயர்ந்துறங்கிக் கிடந்த தமிழன் ஆங்கில நன்மக்களின் வரவால் ஒருவாறு தன்னிலை உணரத் தொடங்கினான். அவன்றன் மொழியின் சிறப்பும், நாகரிக மேம்பாடும் பிறபிற வாழ்வியற் சிறப்புக்களும் படிப்படியே உலகிற்கு விளங்கத் தொடங்கின. புலமக்களும், அவர்வழிப் பொதுமக்களும் முன்னேற்றப் பாதையில் நடையிடத் தொடங்கினர். ஆனால் அண்மைக் காலத்தில் நடைபெற்று வருவனவற்றை எண்ணின் மன நிறைவடையும் நிலை இல்லை. ஒளிமயமான எதிர்காலம் புலப்படவில்லை!

அயர்லாந்து நாட்டினின்றும் 1838 ஆம் ஆண்டில் இங்கு வந்த அறிஞர் கால்டுவெல் பெருமகனார் அரும்பாடுபட்டுத் தமிழையும் கன்னடம், தெலுங்கு, மலையாளம், துளு முதலிய திரவிட மொழிகளையும், வடமொழியையும், மற்றும் திருந்தாத மொழிகள் பலவற்றையும் பயின்றும், ஆங்காங்குச் சென்று மக்களொடு பழகியும் ஆராய்ந்து 1856 ஆம் ஆண்டில் 'திரவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் (A Comparative Grammer of the Dravidian Languages) என்னும் ஆங்கில நூலை வெளியிட்டார். அவர்காலத்தில் தொல்காப்பியமும், கழக இலக்கியங்களும் வெளிப்படவில்லை. அவ்வாறிருந்தும், தம் நுண்ணிய ஆராய்ச்சி வன்மையால் தமிழின் தாய்மைத் திறத்தையும், தூய்மைச் சிறப்பையும், பிறபிற நலங்களையும் எடுத்துக்காட்டினார். திரவிட நிலப்பகுதி முற்றும் அளாவிய முழுமையான ஆராய்ச்சி நூலாக எழுந்த முதல்நூல் இதுவே. கருவிநூற் குறைபாட்டானும், அக் காலச் சூழலானும் அதன்கண் சிற்சில குறைபாடுகள் உளவேனும் இத் துறையில் இந் நூலை விஞ்சத்தக்க மற்றொரு நூல் இன்றுகாறும் எழவில்லை.

சொற்பிறப்பு-ஒப்பியல் தமிழ் அகரமுதலி (Etymological & Comparative Lexicon of the Tamil Language) என்னும் அகர முதலியை இலங்கைவாணரான அப்பர் ஞானப்பிரகாசர் அவர்கள் உருவாக்கத் தொடங்கினார்கள். இதன் முதல் தொகுதி மட்டுமே 1938 இல் வெளிவந்தது. அவர்கள் மறைவிற்குப் பின் தாவீது அடிகள் என்பார் அப்பணியைத் தொடர்ந்து மேலும் நான்கு தொகுதிகளை வெளியிட்டிருப்பதாகத் தெரிகின்றது.

சென்னைப் பல்கலைக் கழகம், திராவிட மொழிகளின் ஒப்பியல் சொற்றொகை (Comparative Vocabulary of Dravidian Languages) என்னும் நூலை வெளியிடத் தொடங்கிற்று. 1959இல் வெளிவந்த அதன் முதற்றொகுதியின் முன்னுரையில் அடுத் தடுத்துப் பல தொகுதிகள் வெளிவரும் என்று குறிப்பிடப்பட் டுள்ளது. ஆயினும் அவ்வாறு அது தொடர்ந்து வெளியிடப்படவும் இல்லை; அதுபற்றி யாரும் கவலைப்படவும் இல்லை.

ஆக்சுபோர்டு, கலிபோர்னியா பல்கலைக் கழகங்களில் பணி யாற்றும் திருவாளர்கள் பரோ, எமனோ என்னும் அறிஞர் பெருமக்கள் இருவருடைய கூட்டு முயற்சியினால் ‘திரவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலி’ (A Dravidian Etymological Dictionary) என்னும் ஆங்கில அகரமுதலி 1961 ஆம் ஆண்டு இரு மடலங்களாசு வெளி யிடப்பட்டுள்ளது.

இவையெல்லாம் பெரும்பாலும் மொழி நிலையைப் பற்றி யனவே. பிரிவுபட்டும் திரிபுபட்டும் கிடக்கும் திரவிடக் குடியினர் பழக்க வழக்கங்கள், நாகரிகம், பண்பாடுகள் முதலியவற்றைப் பற்றிய முழுமையான ஆராய்ச்சி நூல்கள் உருவாகவில்லை என்றே கூறலாம்.

1706 ஆம் ஆண்டில் தமிழ் நாட்டையடைந்தவரான **அப்பர் பார்த்தலோமசு சீகனபால்கு** என்னும் செருமானியப் பெரியார் தமிழ் நாட்டவர் வாழ்வியல் முறைகளை ஆராய்ந்து நூல் எழுதியுள்ளார். தமிழருடைய மெய்ப்பொருளியல் கொள்கைகள், மத நம்பிக்கைகள், தமிழரிடையே நிலவிய குலப்பிரிவினைகள், சடங்கு முறைகள், கலை, இலக்கியம், மருத்துவம், போர், உழவு முதலியவற்றைக் குறித்து *“மலபார் மக்கள் மதம்” என்னும் நூலிலும், தமிழ்நாட்டுத் தெய்வங்களைப் பற்றிய செய்தி, அவற்றின் தோற்றம், உருவங்கள், குணங்கள், பெயர்களின் பட்டியல், குடும்பச் செய்திகள், விருந் துகள், பணியாளர்கள் முதலியவற்றைக் குறித்து “மலபார் தெய் வங்கள் செய்தி” என்னும் நூலிலும் விளக்கியுள்ளார். **அப்பர் ஈராசு**

---

*தமிழ் நாட்டையே மலபார் என்று குறித்துள்ளனர்.

(Father Heras) அவர்களும், பேராசிரியர் **சிலேட்டர்** அவர்களும் மற்றுஞ் சிலரும் இத் துறையில் குறிப்பிடத்தக்க பணிகளைச் செய்துள்ளனராயினும் அவை தொடக்க நிலையினவே என்பது அறியற்பாற்று.

மெய்ப்பொருளியல் பேரறிஞரும், வரலாற்றியல் வல்லுநரும் செந்தமிழ்ப் பாவலருமான **பெ சுந்தரனூர்** அவர்கள் 1891 ஆம் ஆண்டில் பழைமையும் புதுமையும் ஒருங்கே பொலியும் **மனோன் மணீயம்** என்னும் நாடக நூலை வெளியிட்டார்கள். அதில் அமைந்த,

> **"பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்**
> **எல்லையறு பரம்பொருள்முன் இருந்தபடி இருப்பதுபோல்**
> **கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையா ளமுந்துளுவும்**
> **உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல ஆயிடினும்**
> **ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்து சிதையாவுன்**
> **சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே!"**

என்னும் **தமிழ்த்தாய் வணக்கச் செய்யுள்** தமிழறிஞர்களிடையே காட்டுத் தீயைப்போல் பரவி ஒரு புத்துணர்ச்சியை ஊட்டிற்று.

நிறைபுல வேந்தர் தனித்தமிழ்த் தந்தை **மறைமலையடிகளார்** தம் அஃகியகன்ற நுண்ணறிவு சான்ற எழுத்தாற்றலாலும், சொல் வன்மையாலும் தமிழஞர்களிடையே ஒரு கிளர்ச்சியை யுண்டாக்கி எழுச்சியூட்டினர். பழையனவும் புதியனவுமான பல்வேறு துறைகளில் நூல்கள் எழுதிக்காட்டினர். தமிழ் வளர்ச்சித் துறைக்கு அடிகளார் ஒரு கலங்கரை விளக்கம் எனலாம். அடிகளார் வழியைப் பின்பற்றிப் **பல்கலைப் பேராசிரியர் கா சுப்பிரமணியனூர், பர். நாவலர் ச. சோமசுந்தர பாரதியார், பா. வே. மாணிக்க நாயக்கர்** முதலிய அறிஞர் பெருமக்கள் தொண்டாற்றினர். இன்று அடிகளார் நெறியில் நின்று அயராது அரும்பணியாற்றி வருபவர் **மொழிநூல் முதறிஞர் தேவநேயப் பாவாணர்** அவர்களாவர்.

இவ்வாறு தமிழ்நாட்டில் ஏற்பட்ட வளர்ச்சிநிலை கன்னடம் முதலிய திரவிடமொழி வழங்கும் நாடுகளில் உண்டாகவில்லை. அங்கு மறைமலையடிகள் போலும் சீரிய வழிகாட்டியர் தோன்றாமையே காரணம் எனலாம். இது நிற்க!

தமிழ்நாட்டில் தமிழ் வித்துவான் பட்டம் பெறுவதற்கு வடமொழியும் பயின்றாக வேண்டும் என்னும் நிலை ஒரு காலத்தி லிருந்தது. தமிழ் கல்விக் கூடங்களில் தேர்வுக்குரியதாக

இல்லாமல் வெற்றுப் பாடமாகப் பெயரளவில் இடம் பெற்றிருந்த நாளும் உண்டு. தமிழாசிரியர், தமிழறிஞர்கள் மற்றைத் துறையின ரால் புறக்கணிக்கப்பட்டமை மறந்துவிட முடியாது. அந் நிலைகள் எல்லாம் ஒருவாறு மாறி இன்று தமிழுக்கும், தமிழறிஞர்க்கும் நல் வாய்ப்பும் நல்வாழ்வும் ஏற்பட்டிருக்கின்றன. பழைய நிலைகளோடு இற்றை நிலையை ஒருங்கு வைத்து எண்ணிப் பார்த்தால் மட்டுமே இது விளங்கும்.

ஒன்றுக்குப் பலவாகப் பல்கலைக் கழகங்களும், பலப்பலவாகக் கல்லூரிகளும் ஏராளமாக மேனிலை, உயர்நிலைப் பள்ளிகளும் பெருகி யுள்ளன. தமிழாசிரியர்கள், தமிழ்ப் பேராசிரியர்கள் எண்ணிக் கையும் அவற்றிற் கேற்பப் பெருகியுள்ளன. அவர்தம் தகுதியும் மற்றையோர் தகுதியினும் குறைவில்லாதது மட்டுமன்று, ஒருபடி உயர்ந்திருப்பதாகவே கூறலாம்.

ஆயினும் என்?

இக் கால இளைஞர்கள் படிப்பதைவிட எவ்வாறேனும் பட்டம் பெறுதலிலும், பதவி அதிகாரங்களைப் பற்றிக்கொண்டு பொருள் வளத்தைப் பெருக்கிக்கொள்வதிலும் ஆர்வம் காட்டுகின்றனர். தம்மைப் பெரிய ஆராய்ச்சியாளராகக் காட்டிக்கொள்வதிலும், நூலாசிரியராகப் பெயர் பொறித்துக் கொள்வதிலும் வேட்கை யுடையோர் பலர். மற்றுஞ் சிலரோ சொற்களைத் தூவிக் "கவிதை—புதுக்கவிதை" என்று பெயர் சூட்டித் தமிழின் பெருமையையும் குலைக்கின்றனர்.

பட்டம் பதவிகளை விரும்புவதும் பெறுவதும் தவறானவை அல்ல. ஆயின் அவற்றுக்குத் தகுந்தவாறு தம்மை வளர்த்துக் கொள்ளும் நாட்டமின்றி யிருப்பது எத்துணை இரங்கத் தக்கது என்று எண்ணிப்பார்மின்! பேராசிரியர்களாக இருப்பவர்கள் பலர் பன்னூல்களின் கருத்துத் திரட்டாகப் பல நூல்களை எளிய முயற் சியில் உருவாக்கி வைத்துக்கொண்டு தம் மிகப் பெரிய பட்டம் பதவிச் சாய்கால்களைப் பயன்படுத்தி அவற்றை மாணவர்களிடமும் மற்றவர்களிடமும் விலை போக்குவதில் முனைந்து நிற்கின்றனர்.

கொற்றெருவில் கொனை முறிந்த ஊசியை விற்பது போல், 20 ஆம் நூற்றாண்டிலேயே ஒலியனைக் கண்ட மேலையர்தம் வரலாறு தழுவாத வண்ணனை மொழிநூல் கருத்துக்களை ஆராய்ச்சி யாளர்கள் சிலர் பொழிந்துகொண்டிருக்கின்றனர். இலக்கிய வரலாறு, கொள்கை, கோட்பாடு, நெறி, திறன் என்னும் பெயர் களில் ஒரே வகையான கருத்துக்கள் வெவ்வேறு நூல்களாக வெளி

யிடப்படுகின்றன. திறனய்வு, ஆய்வடங்கல் என்னும் பெயர்களில் சொற்கள், பக்கங்கள், உவமைகள் முதலியவற்றைப் பட்டியல் போட்டு ஆராய்ச்சிகளாகப் பகட்டும் நூல்கள் புற்றீசல் போல் புறப்பட்டுக்கொண்டிருக்கின்றன. இவ்வாறு ஆராய்ச்சி என்பது ஒருவகைப் பொழுதுபோக்காக இழிந்துவிட்டது.

நூற்று நாற்பது ஆண்டுகளுக்கு முன் ஈண்டுப் போந்தார் கால்டுவெல் பெருமகனர். இற்றை நாள் போல் போக்குவரத்து அன்று எளிதில்லை. மின்சாரம் இன்னதென்றே தெரியாது. நூல்களெல்லாம் ஓலைச்சுவடிகளே; அவையெல்லாம் பாடல்களே; அகர முதலிகள் செம்மையாக உருவாகவில்லை. நூல் நிலையங்கள் இல்லை. இத்தகு சூழ்நிலையில் பற்பல மொழிகளைப் பயின்று ஆங் காங்குச் சென்று உசாவியறிந்து பதினெட்டு ஆண்டு அயரா உழைப்பின் பயனுகக் கால்டுவெல் தமது திரவிட மொழிகளின் ஒப்பிலக்கணத்தை உருவாக்கினர். பர். உ. வே. சாமிநாத ஐயர் அவர்களை நினைத்துப் பாருங்கள்! ஓலைச் சுவடிகளைத் தேடியலைந்து அவர் செய்த முயற்சி எவ்வளவு! ஆறுமுகநாவலரின் உழைப்புக்கு அளவுண்டா? மண்ணெய் விளக்குகளையே பயன்படுத்திக் கொண்டு பல்லாயிரம் நூல்களைப் பயின்று பல்துறை நூல்களையும் வரைந்த மறைமலையடிகளார் முயற்சியை அளவுபடுத்தி யுரைக்க முடியுமா? ஆராய்ச்சிப் பட்டம் பெற முந்தி நிற்கும் அறிஞர்காள் சற்றே எண்ணிப் பாருமின்!

திரவிடநாடு முழுவதிலும் மற்றும் தமிழ் வழங்கும் இடங்களி லும் வழங்கும் பழமொழிகள், பழங்கதைகள், உவமைகள், மரபுத் தொடர்கள், நாட்டுப் பாடல்கள், திருக்கோயில் வழிபாடுகள், மணச்சடங்கு பிணச்சடங்கு ஆகிய வாழ்வியல் நடைமுறைகள் முதலியவற்றை ஆங்காங்குச் சென்று கண்டும் கேட்டும் திரட்டி ஆராய்ந்தால் எத்துணைப் பயனுடையதாய் இருக்கும்! இன்று கருநாடகம், ஆந்திரம், கேரளம் முதலியன பெயர்களில் பிரிந்து கிடப் பினும் பண்டு இவையெல்லாம் தமிழ் வழங்கிய நிலமே யாதலின் தமிழையும், தமிழினத்தையும் பற்றி ஆராயும் எவரும் திரவிடநாடு முற்றிலும் ஆராய்ந்தாலொழிய அவ்வாராய்ச்சி முழுமையடையாது என்பதை உணர்தல் வேண்டும்.

தமிழ்நாட்டில் ஓரிலக்கம் கல்வெட்டுக்கள் கண்டுபிடிக்கப்பட்டும், படியெடுத்து வெளியிடப்படாமலே உள்ளன. அவ்வாறே கருநாட கம் முதலிய பகுதிகளிலும் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவற்றையெல்லாம் படியெடுத்து வெளியிடும் முயற்சியை மேற் கொள்ளலாகாதா?

பூம்புகார், கொற்கை முதலிய பகுதிகளில் அகழ்வாராய்ச்சி மேற்கொண்டால் எத்தனையோ அரியபெரிய உண்மைகள் விளங்கும். அவற்றைச் செய்யுமாறு அரசை வலியுறுத்தினால் என்னே? எழுத்துச் சீர்திருத்தத்தில் அக்கறை காட்டும் அரசு ஏன் இது போலும் பெரும்பணிகளைச் செய்யக்கூடாது?

சிந்துவெளி நாகரிக ஆராய்ச்சி போன்றவற்றை உலக அரங்கில் ஒளிபெறச் செய்வது தமிழ்ப் பேரறிஞர்களின் தனிப் பெருங் கடமையன்றோ? அரசை வலியுறுத்தியும், ஒன்றிய நாடுகளின் கல்வி அறிவியல் பண்பாட்டுக் கழகம் (UNESCO) முதலியவற்றைத் தூண்டியும் முயற்சி மேற்கொண்டால் என்னே?

தமிழறிஞர்கள் ஒவ்வொருவரும் பொதுவாக வெளிநாட்டு மொழியொன்றைப் பயில்வது என்றும் சிறப்பாகத் திரவிட நாட்டு மொழிகளைப் பயில்வ தென்றும் உறுதி எடுத்துக்கொண்டு அதற்கான வழிவகைகளைத் தேடி உழைத்துத் தமிழின் சிறப்பை விளக்கவும், தமிழுக்கு வளஞ்சேர்க்கவும் முனைந்தால் நம் நாடும் மொழியும் எத்துணை வளம்பெறும்!

மொழி வளர்ச்சிக்கும் மக்களின் அறிவு வளர்ச்சிக்கும் கலைச் சொல்லாக்கம் எத்துணை இன்றியமையாதது? அத் துறையில் தமிழறிஞர்கள் முனைந்தால் என்ன? தமிழறிஞர்கள் ஒவ்வொருவரும் அறிவியல் துறை ஒவ்வொன்றைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு பணியாற்றலாகாதா?

இலக்கியக் கருத்தரங்கு, பட்டிமன்றம், பாட்டரங்கங்களும் சொற்பொழிவுகளும், போதுமானவையா? திரைப்படப் பாடல் ஆராய்ச்சிகளும், சிறுகதையாளர் ஆய்வடங்கல்களும், "புதுக் கவிதை" உருவாக்கங்களும் உலக அரங்கில் நம்மைத் தலைநிமிரச் செய்யுமா? பிற நாடுகள் மதிக்கும் வண்ணம் அறிவியல் துறையில் புதிய படைப்புக்களைத் தமிழ்மக்கள் படைத்துப் புகழ் பெறுதல் வேண்டுமன்றோ?

பெரும்பயன் விளைக்கும் அரும் பணிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு அவற்றுக்கான திட்டம் வகுத்து அவ் வழியில் பொறுமையாக உழைத்து ஆக்கம் பெருக்க வேண்டும் என்னும் பேரார்வம் இற்றை ஆராய்ச்சியாளர்கட்கு இல்லை. இருந்த இடத்தில் இருந்து, அச்சிடப்பட்ட நூல்களைப் புரட்டி, எளிய முயற்சியில் சிற்சிறு வினைகளைச் செய்து விளம்பரந் தேடிக்கொள்வதிலேயே ஆர்வம் காட்டுகின்றனர்; நிறைவடைகின்றனர். இந் நிலை மாற வேண்டும்! அறிஞர்கள் நன்கு எண்ணி உன்னிப் பெருவினைகளில் ஈடுபட முன்வருவார்களாக!

# தமிழின் தலைமையை நாட்டும் தனிச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

13 மன்

உன்—உன்னல் = வி. 1. கருதுதல். "உன்னலே தியானம்" (கந்தபு. திருநகர. 81). 2. நினைத்தல். பெ. 1. கருதுகை (பிங்.) "உன்னல் காலே ஊன்றல் அரையே முறுத்தல் முக்கால் விடுத்தல் ஒன்றே." 2. மனம் (பிங்.).

ம. உன்னு, க. உன்னிசு.

உன்னலர் = கருதார், பகைவர்.

உன்—உன்னம் = 1. கருத்து. (திவா.). 2. ஊழ்கம். (தியானம்). "அகத்தியான் பள்ளியை பள்ளியை யுன்னஞ் செய்த" (தேவா. 847 : 2). 3. மனம் (திவா.). 4. கருதுங் குறி, குறியாகக் கொள்ளும் மரம். "ஓடா உடல்வேந் தடுக்கிய வுன்ன நிலையும்" (தொல். புறத். 5).

உன்—உன்னி. உன்னித்தல் = ஊழ்குதல் (தியானித்தல்). "கண்ணபிரான் கழல் வாழ்த்துமி னுன்னித்தே" (திவ். திருவாய். 4 : 6 : 9).

உன்னி = ஊழ்குதற்குரிய பொருள். "ஞாலமுன்னியைக் காண்டு நாங்கூரிலே" (திவ். பெரியதி. 10:1:3).

உன்னிப்பு = 1. கவனிப்பு. அவன் உன்னிப்பாய்க் கேட்கிறான். 2. உய்த்துணர்வு (ஊகிப்பு.). 3. தப்பாக் குறிப்பு. இருட்டிலும் உன்னிப்பாக எடுத்துவிட்டான் (W). 4. மதிக் கூர்மை (W.).

உன்—முன் = மனக்குறிப்பு. "முன்னுற வுணர்தல்" (தொல். கள. 36).

க. முன்னு.

முன்—முன்னம் = 1. கருத்து. "முன்ன முகத்தினுணர்ந்து" (புறநா. 3). 2. குறிப்பு. "முன்னத்தா னென்று குறித்தாய்போற் காட்டினை" (கலித். 61). 3. குறிப்புப் பொருள் முன்னவிலக்கு

(தண்டி. 42). 4. இம்மொழி சொல்லுதற்கு உரியாரும் கேட்டற்கு உரியாரும் இன்னார் எனப் படிப்போர் அறியுமாறு செய்யப்படும் செய்யுளுறுப்பு. "முன்னம் பொருளே துறைவகை எனாஅ" (தொல். செய். 1). 5. மனம் (திவா.).

முன்னம்—முனம்—மனம் = கருதும் புலம்.

முன்—மன் = சூழும் மந்திரம். (பிங்.).

மன்னுதல் = கருதுதல், சூழ்தல்.

மன் + திரம் = மந்திரம். ஒ. நோ : மன் + து = மன்று—மந்து—மந்தை.

மந்திரம் = 1. திண்ணிய எண்ணம் (பிங்.), மனவுறுதி. 2. சூழ்வு (ஆலோசனை) (பிங்.). 3. அரசியல் பற்றிய அரசன் அல்லது அமைச்சன் சூழ்வு. 4. அமைச்சர் குழு, மந்திரிகள் சவை. "மன்னவன் தனக்கு நாயேன் மந்திரத்துள்ளேன்" (கம்பரா. உருக்காட். 31). 4. மறைமொழி.

*"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த*
*மறைமொழி தானே மந்திரம் என்ப."* (தொல். செய். 176)

4. திருமூலர் திருமந்திரம் போன்ற நூல், 5. சிவபோற்றி (சிவாயநம.) என்பதுபோன்ற உருப்போடும் திருமொழி. 6. திருவைந்தெழுத்திலுள்ள உயிர்நாடி யெழுத்து, சி. "நாயோட்டு மந்திரம் நாதனிருப்பிடம்" (திருமந். 2672). 7. வசிய மந்திரம். 10. சாவிப்பு மந்திரம். 11. பேய் மந்திரம். 12. மாயம்.

மந்திரம்—வ. மந்த்ர (mantra).

மந்திரக்கலப்பை = மந்திர மன்ருட்டிற்குரிய பண்டங்கள். "மானுரிமடியு மந்திரக் கலப்பையும்" (பெருங். உஞ்சைக். 36 : 226).

மந்திரக்காரன் = மந்திரஞ் செய்பவன் (W.).

மந்திரக்கிழவர் = சூழ்வுக்குழுவார். "மந்திரக் கிழவரை வருகென் றேவினன்" (கம்பரா. அயோத். மந்திர. 4).

மந்திரக்கூறை = பூசைப்பட்டு. (W.).

மந்திரக்கோட்டி = சூழ்வுக்குழு. "மனமுணக் கிளந்த மந்திரக் கோட்டியுள்" (பெருங். உஞ்சைக். 36 : 277).

மந்திரக்கோடி = மந்திர வாழ்த்தொடு மணமகள் பெறும் புடைவை. ''மந்திரக் கோடி யுடுத்தி'' (திவ். நாய்ச். 6 : 3).

மந்திரக்கலை = மந்திர நூல்.

மந்திரக்காவி = செங்காவி தோய்த்த துறவியுடை. (W).

மந்திரச் சுற்றம் = மந்திரக் கிழவர். ''மந்திரச் சுற்றமொடு மன்னனும் விரும்பி'' (மணி. 28 : 184).

மந்திரச்சாலை = அரசன் அமைச்சரொடு சூழ்வுசெய்யும் தனி மண்டபம். ''மாடக்கோயில் மந்திரசாலை சேர்ந்தான்'' (சூளா. குமார. 41).

மந்திரத்தோழி = தலைவியின் அணுக்கப் பாங்கி. ''யாப்பியா யினியெனு மந்திரத் தோழியொடு '' (பெருங். மகத. 9 : 54).

மந்திரத்தெய்வம் = மந்திரத்திற்குரிய தெய்வம்.

மந்திர நாயகன் = மந்திரத் தெய்வம்.

மந்திரப் படலம் = அரசன் சூழ்வு செய்வதைக் கூறும் பாவியப் (காவியப்) பகுதி.

மந்திரப் பொருத்தம் = மந்திரம் ஓதுபவனுக்கும் மந்திரத் திற்குமுள்ள பொருத்தம்.

மந்திரப் பொருள் = மந்திரச் செய்தி, ''மந்திரப் பொருள் வயின் ஆஅ குநவும்'' (தொல். எச்ச. 53).

மந்திர பதம் = மந்திரிப் பதவி.

மந்திரம் பண்ணுதல் = 1. மந்திரம் ஓதுதல். 2. பேய் மந்திரஞ் செய்தல். 3. மாயஞ் செய்தல்.

மந்திரமாலை = திருமூலர் திருமந்திரம். ''ஞானம் முதல் நான்கு மலர் நற்றிருமந் திரமாலை'' (பெரியபு. திருமூல. 26).

மந்திரமைந்து = ஐந்தெழுத்து மந்திரம். ''மந்திரமைந்து...... ......அதன்செவிச் செப்புகின்ருன்'' (சீவக. 945).

மந்திரர் = அமைச்சர். (சூடா).

மந்திரவாள் = 1. மந்திர ஆற்றல் வாய்ந்த வாள். (W.) 2. அரசன் வாள். (W.)

மந்திரவாளி = மந்திரக்காரன்.

மந்திரவோலை = அரசன் திருமுகம். "மந்திர வோலை போக்கிய வண்ணமும்" (பெருங். மகத. 25 : 39)

மந்திரம்—மந்திரி.

மந்திரித்தல் = செ. குன்றுவி. 1. சூழ்தல் (ஆலோசித்தல்). "மகட்பேசி மந்திரித்து" (திவ். நாய்ச். 6 : 3). 2. மந்திரத்தால் ஊழ்குதல். "மந்திரிப்பார் மனத்துளானை" (தேவா. 590 : 4). 3. மந்திர வலிமையால் எதிரியை அடக்குதல் அல்லது பிறரைக் கட்டுப்படுத்துதல். 4. மந்திரத்தால் நோய் நீக்குதல். 5. மந்திரம் ஓதிக் குழையடித்தல். 6. மந்திர ஆற்றலுண்டாக்குதல். நீரை மந்திரித்துக் கொடுத்தான்.

செ. கு. வி. மந்திரம் ஓதுதல். மந்திரித்தல் என்னும் வினைச் சொல் வடிவம் வடமொழியில் இல்லை.

மந்திரி = பெ. 1. அமைச்சன். "பழுதெண்ணு மந்திரியின்" (குறள். 639). 2. வருங்காலச் செய்தி சொல்வோன். "மந்திரிக் கழகு வரும்பொரு ளுரைத்தல்" (வெற்றி வேற்கை. ௮)
மந்திரி = வ. மந்த்ரின் (mantrin).

தொல்காப்பியம் அஷ்டாத்யாயீ என்னும் பாணினீயத்திற்கு முற்பட்ட கி. மு. 6-ஆம் அல்லது 7-ஆம் நூற்றாண்டு நூல். அது ஆரியர் வருகைக்கு முற்பட்ட குமரி நாட்டு முழுத்தூய தமிழ் நூல்களின் தொகுப்பென்பது பனம்பாரனார் சிறப்புப் பாயிரத்தாலும் தொல்காப்பியரின் கூற்றுக்களாலும் அறியப்படும்.

"பெயர்நிலைக் கிளவியின் ஆஅ குநவும்
திசைநிலைக் கிளவியின் ஆஅ குநவும்
தொன்னெறி மொழிவயின் ஆஅகுநவும்
மெய்ந்நிலை மயக்கின் ஆஅ குநவும்
மந்திரப் பொருள்வயின் ஆஅ குநவும்
அன்றி அனைத்தும் கடப்பா டிலவே." (எச்ச. 53)

"பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே
அங்கதம் முதுசொலோ டவ்வேழ் நிலத்தும்
.......................................................
யாப்பின் வழிய தென்மனார் புலவர்." (செய். 78)

"எழுநிலத் தெழுந்த செய்யுள் தெரியின்
அடிவரை யில்லன ஆறென மொழிப." (செய். 162)

"அவைதாம்
நூலி னான உரையி னான
கொடியொடு புணர்ந்த பிசியி னான
ஏது நுதலிய முதுமொழி யான
மறைமொழி கிளந்த மந்திரத் தான
கூற்றிடை வைத்த குறிப்பி னான." (செய். 163)

"நிறைமொழி மாந்தர்...........மந்திரம் என்ப". (செய். 176)

என்னும் நூற்பாக்களால், தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே தமிழில் மந்திரம் இருந்ததென்பதும், 'வாய்மொழி' என்பது போன்றே 'மந்திரம்' என்பதும் தென்சொல் என்பதும், தெற்றெனத் தெரிந்து கொள்க.

சிலர், வாய்மொழி யென்றொரு சொல் தமிழிலிருப்பதால், 'மந்திரம்' என்பது வடசொல்லெனக் கருதுவர். தமிழ் முன்மொழியும் இயன்மொழியும் வளமொழியும் வழங்கு மொழியுமாகு மென்றும், வடமொழி பின்மொழியும் திரிமொழியும் கலவை மொழியும் இலக்கிய நடை மொழியுமாகுமென்றும் வேறுபாடு அவர் அறிதல் வேண்டும்.

ஐம்பெருங் குழுவையும் எண் பேராயத்தையும் துணைக் கொண்ட செங்கோற் கோவரசு குமரிக் கண்டத்திலேயே தோன்றி விட்டதனாலும், அக் காலத்து அரசன் தெய்வத்தோடொப்பக் கருதப் பட்டதனாலும், அரசனது கட்டளையை எழுதுவோர் **திருமந்திர வோலை** யென்றும், அவரின் தலைவர் **திருமந்திர வோலை நாயகம்** என்றும், தொன்று தொட்டுச் சொல்லப்பட்டு வந்தனர். ஆரியர் வருகைக்கு முந்திய தனித் தமிழிலக்கியம் அனைத்தும் அழிக்கப்பட்டுவிட்டதனால், பண்டை வழக்குச் சொற்களை இன்று கல்வெட்டுக்களி லேயே காண முடிகின்றது.

மந்திரம் என்னுஞ் சொல்லிற்கு மன் என்பது மூலமாக வடமொழி அகர முதலிகளிற் காட்டப்பட்டிருப்பதனாலேயே 'மந்திரம்' என்பது வடசொல்லாகி விடாது. மன் என்பது முன் என்பதன் திரிபென்று மேலே விளக்கப்பட்டுள்ளமை காண்க.

உன்—முன்—முனம்—மனம்—வ. மனஸ்—L. *mens*. மனஸ்—மனசு—மனது என்னும் திரிபு தமிழுக்கு வேண்டியதில்லை. ஆங்கிலத்திலுள்ள mind என்னும் சொல்லிற்கு *men* என்பதே மூலமாகக் காட்டப்பட்டுள்ளது. அது இலத்தீன் சொல்லினின்று அமைக்கப்பட்டதாகத் தெரிகின்றது. ஒ. நோ: உரம்—வ. உரஸ்.

கிளேன் (Klein), தம் ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகர முதலி யில், மனத்தைக் குறிக்கும் ஆங்கிலச் சொல்லின் இனச் சொற்களை யும் மூலத்தையும் தொடர்புள்ள திரிசொற்களையும் பின்வருமாறு காட்டுகின்றார்.

*E. mind*, n. *ME mind mynd*, *minde*, *munde*, fr. *OE. gemynd*. 'memory, remembrance', rel. to *OHG. gimunt*, *Goth. gamunds*, of s.m., *OS. minnea OHG. minna*, *OFris. MDu.*, *MHG.*, *G mine* (orig. 'memory, loving memory'), *ON. minni*, 'mind', *Dan. minde*, 'memory, mind', *Goth muns*, 'thought', *munan*, 'to remember', fr. *I.—E* base *men-*, 'to think, remember, have one's mind aroused, apply oneself to', whence also *OI. matih matih* (for *mantis*), 'thought, opinion', *manas*, 'spirit, passion', *manyatē*, 'thinks' *munih*, 'inspired', *Toch. Amna*, 'thought', *Arm. i-manam* 'I understand', *GK. menos*, 'desire, ardor, spirit, passion', *memona*, I remember, wish, long, yearn, strive', *mentor*, 'adviser', *mnasuai*, to remember, *mimneskein*, 'to remind, call to mind', *mnesis*, 'remembrance, memory', *meesios*, pertaining to memory, *amnesia*, forgetfulness, *mneme*. remembrance, memory, *mnemon*, 'mindful, remembering', *maemonikos*, 'of memory, having a good memory', *mainesuai*, 'to be mad', *mania*, 'madness, frenzy', *mantis*, 'seer', *manteia*, 'oracle, divination', *matos*, in *automatos*, 'acting of one's own will (compounded of *autos*, 'self' and *mntos*, 'thinking'), *L. mens*, gen. *mentis* (for *I.—E.* mntis), 'mind, understanding, reason', *menini*, *meminisse*, 'to remember', *menere*, *monere*, 'to remind, warn, advise, instruct', *monstrun* an evil omen, portent, mouster [for *mone strom*, lit. 'that which serves as a warning' fr. morere)], *monstrere*, 'to show, point out, indicate', *Lith. mintis*, 'thought, idea', *utmintis*, 'rememberance', *OSlav. mineti*, to believe, think', *pameti*, 'rememberance,' *Russ. pamjat*, 'memory', *OIr. domoiniur*, 'I believe, think'.

இனி அவர் காட்டும் திரிசொற்கள் வருமாறு:

minnesinger, minikin, admonish, amentia, amnesia, amnesty, anamnesis, automatic, Clymnestra, Comment, dement, dementia, demonstrate, Epimethens, Eumenides, bentamente, Macnad, man, manas,—mancy, mandarin, mania, mantic, mantis, mantra, mathematic, memento,

mental, mention, Mentor, mnemonic, mnesic, mnestic, monition, monitor, monstrance, monster, monument, Muse, muster, necromancy, Promotheus, reminiscence, remonstrance, remonstrate, summon, tardamente, Trichomanes, Zamenis.

கிளேன், மதி, man என்னுஞ் சொற்களை மன் என்னுஞ் சொல்லொடு தொடர்பு படுத்தியுள்ளார். அஃதொன்று தவிர மற்றவையெல்லாம் சரியே. அவர் காட்டிய சொற்களினின்று, மனம் என்பது தூய தென்சொல் லென்றும், அதன் மூலமான மன் என்பதே mind என்பதற்கும் அதன் இனச் சொற்கட்கும் மூலமென்பதும், தெற்றெனத் தெரிந்து கொள்க.

மாந்தனைக் குறிக்கும் man என்னுஞ் சொல் முந்தின கட்டுரையிற் கூறியவாறு மகன் என்பதன் திரிபென்றும், மனத்தைக் குறிக்கும் mind என்னுஞ் சொல், முன் என்னும் தென்சொல் வேரின் திரிசொல்லென்றும், வேறுபாடறிந்து கொள்க.

மதி என்னும் சொல் வரலாறு வேறொரு கட்டுரையிற் கூறப்படும்.

ஓரறிவுயிருக்கு மேம்பட்ட உயிரினங்கட்கெல்லாம் கருத்துப் புலன் இருப்பதால், man = thinking animal என்பது பொருந்தாது.

Mind என்னுஞ் சொல் வரலாற்றில், *AS gemynd*, memory, mind, thought (where the prefixed *ge* makes no difference); Formed (with the usual vowel-change of *u* to *y*) from *AS. munan*, to think என்று கீற்று (Skeat) தம் ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகரமுதலியிற் குறிக்கின்றார்.

*munan* என்பதில் *mun* முதனிலை; *an* நிகழ்கால வினையெச்சவீறு முன்(னு)வான்—முன்னுன்—முனன். 'வான்' நி. கா. வி. எ. ஈறு. வான்—ஆன்—அன், 'ஆன்' என்பதே மலையாள நி. கா. வி. எ. ஈறாயிருத்தல் காண்க.

———

## தொல்காப்பியம்

# எதிர்மறை முகத்தான் ஏற்றம்

### ["கவிஞர்கோ" கோவை. இளஞ்சேரனூர்]

(கலிவெண்பாட்டு)

"கல்லணையில் நிற்கின்றோம் கண்ணம்மா, உன்னுடைய
சொல்லணையைச் சற்றே திறந்துவிடு—வல்லவனும்
சோழன் கரிகாலன் சோர்விலாக் காவிரிக்கு
ஞாலம் புகழும் கரையெடுத்தான்—கோலும்
கரையின்றேல் காவிரியால் கண்டபயன் என்னும்?
உரை" யென்றான் கண்ணப்பன். அன்னாள்—"வரையறை
கட்டுப் படுத்துங் கரையின்றேல் காவிரிதான் [யாய்க்
கட்டவிழ்த்து விட்ட கடக்களிறாய்,—இட்ட
தலைக்கயி றில்லாத் தடிமாடாய், ஊரை
அலைக்கழித் தோடாமல் என்றும்—நிலைத்த
அணையும் கரையும் அமைத்தே வளங்கொள்
பணையும் வயலும் பயனாய்—முனைந்து
வரையறை செய்த கரிகால னைப்போல்
உரைசெய யாரும் உளரோ?—உரை' யென
அன்னவள் சொல்ல அவனுரை செய்குவன்:
"அன்னமே, வற்றாத காவிரித்—தண்ணீர்
வழிக்குக் கரையெடுத்த வல்லமைக்கு மேலா
மொழிக்குக் கரையெடுத்தோன் உள்ளான்;—கழிக்கின்ற
கல்லால் அணையமைத்தான் காலன்; அழிந்திடாச்
சொல்லால் அணையமைத்தான் காப்பியன்;—மெல்லக்
கரையும் கரையெடுத்தான் மன்னன்; கரையாக்
கரையெடுத் தோன்சொற் புலவன்;—புரையும்
கதையளக் காமலே காப்பியம் செய்தான்;
விதையெனச் செந்தமிழ் வித்தித்—துதையும்
தமிழுக்குக் காப்பின் இயல்என நின்றே
இமிழ்கடல் நானிலத் தீன்றான்—அமிழ்தெனும்
தொல்காப் பியனெனத் தன்பெயர் தோற்றியே
தொல்காப் பியநூலைத் தோற்றினான்—மல்குநூல்
நந்தாய் மொழிக்கொரு நாடி; ஒளிதரும்
நந்தா விளக்கது கோடியாம்;—முந்திச்
சிதைக்கும் பகைக்கது காப்பு; பதிந்த
சிதைவிலா முத்திரைக் கோப்பு;—விதையாய்
இலக்கணத் தின்கட் டளைக்கல்; வளரும்
இலக்கியத் திற்கோர் உரைகல்.—முழக்கும்

---

* 23—10—77இல் தஞ்சையில் நிகழ்ந்த தொல்காப்பியர் மாநாட்டுக் கருத்தரங்கில் படிக்கப்பட்டது.

எழுத்ததி காரம்நற் சொல்லதி காரம்
வழுத்தும் பொருளதி காரம்,—பழுத்திட்ட
முக்கனியாம் பாங்கில் முறையாய்ப் படைத்திட்ட
அக்கனியில் மிக்கசுவை எக்கனியோ—மைக்கணியே
சொல்'' லென்றான். கண்ணம்மா சொல்லும் மொழியதில்
வெல்லமொழி நன்னயமாய் வைத்திட்டே—சொல்லலுற்றாள்:
''முக்கனி என்றிட்டாய் முற்றிலும் உண்மையே;
பொய்க்கனி ஒன்றைப் புகன்றிட்டாய்.—ஒக்கக்கேள்!
தொல்காப் பியனேதான் தோற்றிய தொன்னூலாம்
தொல்காப் பியமென்றும் தோலாத—பல்கவின் பல்கும்
எழுத்ததி காரமென் றில்லவே யில்லை
அழுத்தமாய்ச் சொல்வேன் அன்பா!—எழுத்தைத்
தொகுத்தும் விரித்துந் தொடர்ந்தும் கனிபோல்
வகுத்த இனிமையைக் கொண்டு—பகுத்தால்
எழுத்ததி காரமாய் இல்லையே' என்றாள்.
(எழுத்து அதி காரமாய்)
''முழுத்தும் நயமதே; ஆனால்,—எழுத்திற்குச்
சாரியை காரமெனச் சார்ந்திருக் கும்போது
காரமே இல்லையோ?'' என்றிட்டான்.—''காரந்தான்
ஒன்றே உளதால் அதிகாரம் இல்லையே''

(அதி—காரம்)

என்றாள். ''அதனால் அதிகாரம்—என்பதே
தொல்காப் பியமதில் தோற்றிய தில்லெனச்
சொல்லவுஞ் சொல்வாய்'' எனச்சொல—மெல்லியல்,
''சொல்லதி காரமுந் தொல்காப் பியமதில்
இல்லென் பதற்கும் இடமுண்டு.—சொல்வேன்:
வளவிய செந்தமிழ்ச் சொல்லில் வடசொல்
நுழையும் விதிப்பில் ''வடசொற்—கிளவி
வடவெழுத் தொரீஇ'' எனவே வடசொல்
முடம்படச் செய்த முறையால்—வடசொல்
முழுவுரு வம்போய் முடங்கித் திரிந்து
எழுதற் கியலா நிலையுற்—றழும்வட
சொல்—அதி காரமும் தொல்காப் பியமதில்
இல்லென் பதற்கும் இடமுண்டு.—செல்வப்
பொருளை விளக்கும் பொருளாய் எதையும்
அருளாது விட்ட அமைப்பால்—மருள்தரும்
செல்வப் பொருளின் **அதிகாரம்** காப்பியச்
செல்வத்தி லில்லாமற் செய்ததால்—செல்வப்
பொருளதி காரமும் இல்லையாம்'' (தொடரும்)

# சிவஞானபோத ஆராய்ச்சி

[அருட்டிரு அழகரடிகள்]

(சிலம்பு ௫, பரல் ௨, ௬௪ஆம் பக்கத் தொடர்ச்சி)

செய்யுளில், ஆதல் என்பதை ஆதலால் என்று ஆல் விரித்துக் கொள்க; காத்தும் என்றவிடத்து உம்மை சிறப்பு, 'சார்ந்தடியார்' என்பதைச் 'சார்ந்த அடியார்' என்று பிரித்துக்கொள்க. அடியார் தாம் - அடியாரையே; தானு என்னும் ஆக்கம் தன்போல் என்னும் பொருளில் வந்தது. 'தங்கள்' என்னும் 'கள்' விகுதியேற்ற பன்மைச் சொல்லே, வழக்கு காரணமாக இலக்கியச் சொல்லாக இச் செய்யுள் ஏற்றது. தாம் - இறைவன்; சலமிலனுய்க் கொடுத்தலே என்று முடித்துக்கொள்க. 'ஆய்ந்தார்' என்பதை ஒரு சொல்லாகக் கொண்டு, நுணுகி ஞானமுணர்ந்தவராக முடிக்க.

> "இங்குளி வாங்கும் கலம்போல ஞானிபால்
> முன்செய் வினைமாயை மூண்டிடினும்—பின்செய்வினை
> மாயையுடன் மில்லாது, மற்றவன்ருன் மெய்ப்பொருளே
> ஆயவத ஞல்உணரும் அச்சு."

பின்னும் எழுகின்ற ஓர் ஐய நினைவிற்கு இச் செய்யுளில் விடை வருகிறது. இறைபணியாளராகிய பதிஞானச் சிறப்புடையோர்க்கு வினை அப்படி மெலிவாய்த் தாக்குவதானுல், 'தினைத் துணையேனும் பொறேன்துயர் ஆக்கையின் திண்வலையே' என்று மாணிக்கவாசகர் யாக்கையினுல் ஏன் மிகுதியாக வருந்த வேண்டும், 'தினைத் துணையேனும் பொறேன்' என்கிருரே, என்பது கேள்வி. மலங்கள் நீங்கிவிட்டாலும் உடல் வாதனையே, மாணிக்கவாசகர்க்கு அவ்வளவு துன்பமாய்த் தெரிகிறது என்க. உடலூழ் (பிராரத் துவம்) அவ்வாறு அவரை வாதனை செய்வது 'ஆக்கையின் திண் வலை' என்று, மேலும் அவர் அப் பிறப்பின் பிணிப்பைத் திண்ணி தாக உணர்ந்து கூறுதல்கொண்டு தெளியப்படும்.

பெருங்காயக் கலத்தில் பெருங்காயம் நீங்கினுலும் அதன் மணம் போகாதது போல, ஞானிகளாய்ப் பதிஞானம் பெருகி நின்று மலம் நீங்கினுலும், உடலிருத்தலால் ஒரோவொருகால் மாயையின் மயக்கமும் முன்வினைப்பிணிப்போடு தாக்குதலும் கூடும். அப்படி மூண்டாலும், மெய்ப்பொருட் சிவமாய் உயிர் மாறி, அந்த மெய்ப் பொருளையே தமக்கு அச்சாக உணருமாதலால், அந்த மாயையின் மயக்கமும் உடல் ஊழின் பிணிப்பும் மெலிந்தேனும் தாக்குகின்றன.

மேல் வினையே உண்டாகாது; அந்த மாயை வினைகளோடு முறுகாமல் நின்று விடுகிறது.

**பொருள் :**

இங்குளி வாங்கும் கலம் போல - பெருங்காயத்தை எடுத்துக் கொண்டபின் அதன் வாசனை மட்டும் இருக்குங் கலத்தைப் போல; ஞானிபால் - அடியார்களிடத்தில்; முன் செய் வினைமாயை மூண் டிடினும் - சென்ற பிறவிகளிற் செய்து இப் பிறவியில் உடலூழாய் வந்த வினைகளும் மாயையின் மயக்கமும் ஒருகால் மூண்டாலும்; பின்செய்வினை மாயையுடன் நில்லாது - (ஆகாமியமும்) மாயையின் மயக்கக் குற்றமும் தொலையும், அவ் வுடலோடு பிற்பிறவிகளுக்காக மேல்வினைகளும் செய்யப்படாமற் போகும்; மற்று - அவ்வாறு அவை நில்லாமை; அவன்றான் மெய்ப் பொருளே ஆயவதனால் - உயிரே மெய்ப்பொருட் சிவமே ஆகிவிட்ட அதனால்; உணரும் அச்சு - இனித் தனக்குரிய அச்சென்று பேரின்ப உணர்வையே உணர்கின்றது.

இங்கே 'முன்செய்வினை' என்றது உடலூழ். ஒரோ வொருகால் வினைகளும் மாயையுடலும் உண்டாதலால், 'வினை மாயை மூண்டிடினும்' எனப்பட்டது. மூண்டிடினும் என வந்தமை யால், மூளாமையே பெரும்பான்மை எனக் கொள்க.

உடல் இருக்கும் வரையில் உடல் என்னும் மாயையின் மயக்கமும் வினையின் தாக்குதலும் இருக்குமாதலால், அவைபோல் 'ஆகாமியம்' என்னும் பின்செய் வினையும் உண்டாகுமோ என்றும் ஐயநினைவுக்கு விடையாகப் 'பின்செய் வினையும் மாயையும் நில்லா' என்றார்.

அச்சு என்பது ஒரே நிலையில் நிற்பது; இறைவன் ஒரே நிலை யினனாதலால் அவனை இங்கே 'அச்சு' என்றார். அப்படி அவனை அச்சாகவே வீடுபேற்றில் உயிர் கருதுதலால், 'உணரும் அச்சு' எனப்பட்டது.

*"நண்அனல் வேவாத நற்றவர் தம்மினும்*
*பண்அமர மாச்செலுத்தும் பாகரினும்—எண்ணி*
*அரனடி ஓர்பவர் ஐம்புலனிற் சென்றும்*
*அவர்திறன் நீங்கார் அதற்கு."*

**பொருள் :**

நண் அனல் வேவாத நற்றவர் தம்மினும் - நடு அனலில் வேவாத ('அக்கினித் தம்பம்' கற்றுக்கொண்ட) சிறந்த தவத்

தோரைப் போலவும்; பண் அமர மாச்செலுத்தும் பாகரினும் - சேணம் பொருந்த அதன்மேல் ஏறிக் குதிரைகளைச் செலுத்தும் ('பாகன் நூல்' கற்ற) பாகரைப் போலவும்; எண்ணி - எண்ணிக் கொண்டு; அரன் அடி ஓர்பவர் - உலகப் பற்று நீங்கிச் சிவத் திருவடியாகிய சிவஞானம் ஒன்றையே உணர்பவர்; ஐம்புலனில் சென்றும் - ஐம்புலன் நுகர்வுகளில் சென்றாராயினும்; அதற்கு அவர் திறன் நீங்கார் - அந் நுகர்வுக்கு, இறைவனை அச்சுப்போல் கருதும் தம் நிலைமையிலிருந்து உயிர்கள் நீங்கிவிடமாட்டா.

முதல் இரண்டு வரிகளில் இரண்டு உவமைகள் வந்தன. தீயின் வேக்காட்டுக்கும் குதிரையின் வேகத்துக்கும் நற்றவரும் பாகரும் தம் ஆற்றல் நீங்காமல் முறுகியே நிற்பர். தீயின் வேக்காடும் குதிரையின் வேகமும் இருக்கும்போதே நற்றவரும் பாகரும் அவற்ரோடு தம் ஆற்றலையுஞ் செலுத்தி அவற்றை யாள்வர்; அதுபோல, அரனடியை ஓரும் புண்ணியம் உடையார் ஐம்புலனில் அகப்பட்டாலும் (அவற்றின் வீறுதலில் அகப்பட்டாலும்), அவற்றை அடக்கியாளும் தம் திறமையிலும் நீங்கிவிடமாட்டார் என்றபடி.

நண் அனல் என்பதை அனல் நடு என்று மாற்றிக் கொள்க. இது முன் பின்னாகத் தொக்கது; ஆறும் வேற்றுமைத் தொகை; 'நீரின் கீழ்' என்பது 'கீழ்நீர்' என்று வருதல் போல என்பது. நற்றவர் தம்மினும் பாகரினும் என்பவற்றில் 'இன்' உவம உருபு. உம்மை சிறப்பு. நற்றவர் என்பது போல நற்பாகர் எனக் கொள்ளுதல் பொருந்தும். பண் அமர - பண்ணில் அமர; பண் - பண்ணப்படும் சேணம்; அனலும் குதிரையும் முறையே வேவுவித் தலும் வேகமும் கொண்டவை. ஆயினும் அவற்றை அடக்கும் நற்றவரும் நற்பாகரும் அனலின் வேக்காட்டுக்கும் குதிரையின் வேகத்துக்கும் அப்பாற்பட்ட திறமையுடையவர்; அவ்வாறு, கடவுளையே உணரும் உயிர்களின் திறத்துக்கு அவ் வுவமைகள் பொறிகளின் வேகமும், புலன்களின் வேக்காடும் அவற்றாற் பற்றப் பட்டிருந்தாலும் வேறானது உயிரின் திறம் எடுத்துக்காட்டாயின.

அனலில் வேவாத நற்றவரின் திறம் அகத்திறம்; மாச் செலுத்தும் பாகரின் திறம் புறத்திறம். அகம் புறம் என்னும் இந்த இரண்டு ஆற்றலுக்கும் மேலானது கடவுளையே ஓர்ந்து காணும் உயிரின் வல்லமை. அவ் வல்லமையின் மாட்சிக்கு அகப்புறச் சிறப்புக்களும் ஈடு ஆகா. அம் மேன்மை தோன்ற இவ் விரண்டு உவமைகளும் வந்தன. ஐம்புலனிற் சென்றும் என்றதனால், செல்லாமையே பெரும்பான்மை. சிறுபான்மை

சென்ருலும், அவ்வைம்புலனையே அவர் அடக்கி ஆள்வர் என்பதற்குச் 'சென்றும்' எனக் குறித்தார்.

இங்கே 'ஐம்புலனிற் சென்றும்' என்றது, தீமைகள் அல்ல. 'இறைபணிக்காக அவ்வாறு'செல்ல நேரினும்' என்னும் பொருட்டு. நால்வர் சமயகுரவர் முதலியோரின் தொண்டுகளைப்போல என்பது கருத்து.

அவ்வாறு தொண்டு செய்வதற்குரியவராக, இறைவனுங் கருதிய அவர் திறம் பெரிது. அதற்கு - அவ் வைம்புல நுகர்வுக்கு; ஒளி இருளைத் துரப்பது போல, மெய்ப்பொருளைக் கருதும் அந்த அச்சுணர்வு, மாயை வினை யிருள்களைத் துரக்கும் என்க.

இச் செய்யுளால், இறைவனையே அச்சென்று நினைப்பவர்க்கு 'இங்குளி வாங்குங் கலம் போல' வாதனையும் அடங்கியே வரும் எனவும், ஐம்புலனில் செல்வதற்குக் காரணம், பிறர் நலத்துக்காகச் செய்யும் இறைபணியே எனவும், எந்நிலையிலும் தன் திறன் நீங்காதவர் எனவும், கருத்துக்கள் விளங்கின.

***''சதசத்தாம் மெய்கண்டான் சத்தருளின் காணின்***
***இதமித்தல் பாசத்தி லின்றிக்—கதமாக்***
***கெரிகதிரின் முன்னிருள்போல் ஏலா அசத்தின்***
***அருகணையார் சத்தணைவர் ஆங்கு.''***

இது இப் பிரிவில் வரும் கடைசிச் செய்யுள். 'சிவசத்'தைச் சேர்பவர் 'சதசத்' எனப்படும் உயிர். சிவசத்தைச் சேரும்போது சார்ந்ததன் வண்ணமாய் விடுதலால், ஐம்புலன் என்னும் அசத்தில் செல்லும்போது தொடக்குண்ணுத திறனுடையராதல் எவ்வாறு எனவும் யாரேனும் நினைக்கக்கூடும். இதற்கு இச் செய்யுளின் கருத்தறிந்து கொள்ளுதல் நல்லது. 'சதசத்' என்னும் உயிர், சத்தையும் அசத்தையும் நாடும் இயல்புடையது என்பது, பொருளே யல்லாமல் எப்போதும் இந்த இரண்டையும் சார்ந்துகொண் டிருக்கும் இயல்புடையதென்பது பொருளன்று. இப்போது அது சத்துப்பொருளை அதன் ஞானத்தால் உணர்கின்றது. அவ்வுணர் வோடு இறைபணியாக, அசத்தையும், உயிர் அருள் வண்ணமாய் ஆளவல்லதாகின்றது. 'சதசத்' என்னும் பெயரின் உண்மையை இவ்வாறு காணவேண்டும்; காண்பது இவ்வாறென்று கொள்க.

**பொருள் :**

சதசத்தாம் மெய்கண்டான் - 'சத்அசத்' என்னும் உயிரின் உண்மையைக் கண்டவன்; சத் அருளின் காணின் - சத்தை அதன்

ஞானத்தாற் கண்டால்; சத்து அணைவர் - சத்தையே அதன் வண்ணமாய் அணைவர்; இதமித்தல் பாசத்தில் இன்றி - அந் நிலையில், பாசத்தில் இதஞ்செய்தல் இல்லாமல் (பற்றுச் செய்தல் இல்லாமல்); கதம் மிக்க எரிகதிரின் முன் இருள்போல் - சீற்ற மிக்க சுடருஞ் சூரியனின் முன் இருள் நீங்குதல் போல; ஏலா அசத்தின் ஆங்கு அருகணையார் - தன் இருள் திறம் ஏலாத அசத்தின் அருகில் ஐம்புலன் திறத்தில் அவர் அணையமாட்டார்;

சத்தை அணைகிறவர்கள் வெறும் அறிவு நிலையில் அளந்து காணுமல், அருளாற் காண்பதாலுல், பாசத்தில் இதமித்தல் இல்லாமல் பதியில் இதமித்தல் உடையவராய், அங்கு அசத்தின் அருகணையார் என்று கொள்க.

இன்றி, காரண காரியப் பொருட்டு; உயர்திணைக்கு ஓதுவது போல எரி கதிர்க்குக் கதம் கூறினமையால், அது முகமனுயிற்று. 'ஏலா அசத்தின்' என்ருர், அசத்தின் ஏலாத்திறன் நினைந்து; கதிர்முன் இருள் நீங்குவதுபோல் இறைவன் ஒளிக்குமுன் அசத்தின் இருள் நீங்கிவிடுதலால் 'ஏலா அசத்' தென்ருர். ஏலா நின்றது அசத்திற்கு வல்லமை இல்லாமையை உணர்த்திற்று. இல்லாமையால், 'அசத்தின் அருகணையார்' என்ருர். ஆங்கு - அந்த அசத்தின் ஐம்புலனில், என்றபடி. இன்றி என்பதற்கு எழுவாய் சதசத்து என்னும் அஃறிணை, சத்து அணைவார் அசத்தின் அருகணையார் என்னும் உயர்திணையில் முடிவது, வேறு முடிபு.

கதிர்முன் இருள் நீங்குவதுபோல், 'சத்' ஒளியின் முன் அசத்தின் இருளும் நீங்குகின்றது என்று உவமையின் கருத்தைப் பொருளுக்கும் கொள்க. ஐம்புலனிற் சென்ருலும் இறைபணிக்காகச் செல்லுதலால், அடியார் இயல்பு கெடாது என்று இச் செய்யுள் வலியுறுத்தியது.

பத்தாம் நூற்பா முற்றிற்று

**குறிப்பு: எட்டாம் நூற்பாவை யடுத்து இடம்பெற வேண்டிய ஒன்பதாம் நூற்பா, கையெழுத்துப்படிகளில் நேர்ந்த மாற்றத்தால் விடுபட்டுப், பத்தாம் நூற்பா தவருகத் தொடங்கப்பட்டுவிட்டது. இப்போது பத்தாம் நூற்பா நிறைவுபெற்றுவிட்டமையால், அடுத்த பக்கமுதல் ஒன்பதாம் நூற்பா தொடங்குகின்றது. அன்பர்கள் எட்டாம் நூற்பாவையடுத்துப் பின்வரும் ஒன்பதாம் நூற்பாவைப் பொருத்திப் படித்துக்கொள்ளுமாறு வேண்டுகின்ருேம்.**

## ஒன்பதாம் நூற்பா

"ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்ணிழலாம் பதிவிதி எண்ணும்அஞ் செழுத்தே."

மேல் எட்டாம் நூற்பாவின் கடைசிப் பிரிவு, 'ஆன்மா இறைவன் திருவடிகளை அணைந்தபின் உலகப் பொருள்களை நுகரத் திரும்பாது, சிறிது திரும்புவதென்பது ஒரோ ஒருகால் மல வாதனைப் பற்றினுல் திரும்பும், அப்படித் திரும்பும் போதும் இறைவனையே சிந்தனை செய்தால் மீண்டும் இறைவனைக் கூடிப் பின் எப்போதும் திரும்பாது' என்னும் கருத்துக்களை விளக்கியது.

இந்த நூற்பாவில், அப்படிச் சிந்தை செய்யும் பயிற்சி பதிஞான பசுஞானங்களுக்குக் கிடையாது. பதிஞானம் ஒன்றுக்கே உண்டு எனவும், சிந்தை செய்யும்போது உலகப் பொருள்கள் கானல் நீரைப் போலத் தாமே கழிந்துவிடும் எனவும், அப்போது இறைவன் குளிர் நிழல் போலக் கருணை ததும்ப எதிர்ப்படுவான் எனவும், உயிருணர்வு அப்படியே நிலைபெற்றுவிடும்படி ஞானத் திருவைந்தெழுத்தை அதன் பொருள் நுணுக்கம் உணர்ந்து உருச் செய்து கொண்டிருக்க வேண்டும் எனவும், உயிர்களின் பயிற்சி, பதிஞானத்தின் திறன் தெளிவிக்கப்படுகின்றன.

ஒரு வகையில் இப் பயிற்சி, ஆன்மாவைத் தூய்மைப்படுத்தி அரன் திருவடிகளை அணைய ஆயத்தப்படுத்துகிறது என்று சொல்லலாம். பசு பாச ஞானங்கள் நீங்கிவிடுதலால் உயிர் தூய்மைப்படுதல் விளங்குகிறது. விரைவில் நீங்குதலால் கானல் நீர் கூறப்பட்டது. கானல் நீரின் இயல்பை 'உராத்துனைத் தேர்' என்பதனுல் அறியலாம். துனை, விரைவு; ஊரா என்பது உரா என முதல் குறுகி வந்தது. பாயா வேங்கை என்று வேங்கை மரத்தைக் கூறுவது போலத் தோற்றத்தில் அசைந்துகொண் டிருந்தாலும் உண்மையில் ஊராமையால் 'ஊராத் தேர்' என்று கானல்நீர் குறிக்கப்பட்டது. விரைவிற் கழிவதற்கே இது உவமை.

ஆன்மா பொறிகளின் வேருகத் தன்னைப் பிரித்துக் காண்பதே சிவஞானம் பதிந்துதான். அப்போது ஆன்மாவின் உணர்வு சிவஞானக் கண்ணுல் எதையும் காண்பதாயிருக்கிறது. ஆன்மா வின் தூய்மையை அது உணர்த்தும்.

திருவைந்தெழுத்தால் ஆன்மத் தூய்மை செய்வது வேறு எதற்கு என்று ஒரு நினைவு தோன்றலாம்.

பதியும் சிவஞானம் எல்லார்க்கும் ஒரே தரத்தில் பதிந்து விடாது. அந்நிலையிலும் ஆன்மாவின் காட்சிக்கு வளர்ச்சி

உண்டாமாதலால், முழுத் தூய்மை தேவையாயிற்று. எல்லா மாய்க் காண்பதும் காட்சியே; வேறு வேருய் இரட்டுறக் காண்பதும் காட்சியே; இப்படிப் படிமுறையில் வரவர உயர்வாய் உயிர்களுக்கு இறைவன் காட்சிப்படுவான். ஆதலால் சிவஞானம் பதிந்த உடனே உயிர் முழுத் தூய்மையை எய்திவிடாது; ஓரளவுதான் தூய்மையுண்டு. ஆதலால் திருவைந்தெழுத்தை உருச்செய்து ஆன்மா தூய்மை அடைவது முதன்மை. அதனை இந்த ஒன்பதாம் நூற்பாக் கூறியது.

'ஊனக்கண் பாசம் உணராப் பதியை ஞானக் கண்ணினில் சிந்தை நாடி' என்பது ஒரு பிரிவும், 'உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவித் தண்ணிழலாம் பதி' என்பது ஒரு பிரிவும், 'விதி யெண்ணும் அஞ்செழுத்தே' என்பது ஒரு பிரிவுமாக, மூன்று பிரிவுகளை உடையது இந்நூற்பா.

**முதல் பிரிவு:**

இறைவனை ஞானக் கண்ணல் காணவேண்டும் என்பது இதன் மேற்கோள்; 'ஈண்டு அம் முதலை ஞானக் கண்ணுலே காண்க' என்பது ஆசிரியர் வாக்கு.

'சிவசமவாத சைவர்க்கு' இங்கே ஒரு நினைவு எழுந்தது. அசத்துப் பற்றிய அறிவை ஆன்மா கொள்ளுவதற்குப் 'பாச ஞானம்' என்று பொதுவாகப் பெயர். மண் முதல் நாதம் வரையில் இப் பொருள்கள் கூறப்படுமாதலால் இவற்றைப் பற்றி ஆன்மா அடையும் அறிவு 'பாசஞான' மாயிற்று; இந்த அறிவால் இறைவன் அறியப்படான் என்பது பொருந்தலாம்; ஆனல், பசுஞானத்தால், அதாவது 'உயிரைப் பற்றி உயிர் அறியும் அறிவினுல், சிவத்தையும் அறிவு இனமானதனுல் அறியலாமே' என்று அவர்கள் நினைத்தனர். சிவஞானம் எதற்கு? என்பது அவர் கருத்து. அதற்காக இந்த முதற்பிரிவு தோன்றி, 'அவனைப் பதிஞானத்தாலேதான் அதாவது ஞானக் கண்ணுலேதான் காண முடியும்' என்று வற்புறுத்திற்று.

அதற்கு ஒரு காரணமும் அவர் கூறுவார். 'வாக்கொலி' 'மன நினைவு' என்னும் பாச பசு ஞானங்களுக்கு அவன் எட்டாத வனுய் இருக்கிருன்; வாக்கு மன அதீதன்; ஆனல் கருணையினுல் அவன் அவற்றிற்குத் தானே எட்டியும் வரக் கூடியவன்; அதாவது, 'கோசரமாய்' நிற்பவன்; எட்டி வருவதைக் காண்பது உயிர் பெற்ற பதிஞானம்; பாச பசு ஞானங்கள் அல்ல; ஆதலால், ஆசிரியர் கூறும் காரணம், 'வாக்குமனுதீத கோசரமாய் நிற்றலான்' என்பது.

வாக்கு என்னும் ஒலி தன்னியல்பில் அறிவில்லாதது; அத்தகையது அசத்தெனப்படுமாதலின் அதைப் பற்றிய அறிவு 'பாச ஞானம்' ஆயிற்று. அத்தகையதன்று மனம் என்பது; உயிரின் அறிவை ஏற்றுத் தானும் அறிவுள்ளதுபோல் தானே நினைக்கும்; அந்த அறிவு ஒரு வகையில் மயக்க அறிவே. அந்த மயக்க அறிவை ஏற்கும் உயிரின் அறிவும் 'பசுஞானம்' எனப்பட்டது. தெளிந்த உணர்வு நிலை வேறு; அதுதான் 'பசுஞானம்' என்பது. ஆதலால் வாக்கும் மனமும் பாச பசு ஞானங்களாயின.

பதிஞானக் கண்ணுக்கு மட்டும் எட்டுவான் இறைவன்; ஆதலால், அவனை ஞானக்கண்ணினுல் மட்டும் சிந்திக்கலாம் என்று தெரிகிறது. பசுபாச ஞானங்களுக்கும் (மனத்துக்கும் வாக்குக்கும்) இந்தப் பதிஞானத்துக்கும் (தெளிவு அல்லது அருளுக்கும்) என்ன வேறுபாடு என்ருல், அதனையும் ஒரு வெண்பாவினுல் ஆசிரியர் விளக்குவார்.

பசுபாச அறிவுகள் எதனையும் அளந்து ஆராய்ந்து முடிவு காணும்; முடிவு ஐயந்திரிபுக்கு ஏதுவாகும்; பதிஞானம், தெளிவு நிலை; அதில் ஐயந் திரிபுகளுக்கு இடமில்லை.

இப்படி இரண்டு வகையாக அறிவு நிலையும் தெளிவு நிலையும் நம் உள்ளத்தில் உள்ளன. அந்தத் தெளிவைத்தான் உணர்வு நிலை என்பது; உயிரின் அறிவு அன்பாகி அது முறுகி அருளைப் பற்றும் நிலை; அன்பு அருளைப் பற்றுதல் இயல்பு; அருள் என்னும் ஞானமும் அன்பைத்தான் பற்றும்.

அன்பு என்பது பொருள்களில் ஓரளவு பற்றுவிட்ட நிலை; அதுவும் 'சிவனடிப் பேரன்பு' என்ருல், உலகப் பொருள்களிற் பெரும்பாலும் பற்றிராது. 'தேடும் பொருள்கள் தமக்கு அன்று' என்று நடக்க உதவுவது அன்பு; 'அன்று' என்பதில் 'று' விகுதி; 'அன்பு' என்பதில் 'பு' விகுதி; கருத்து ஒன்றுதான்; முதன்மையுமானது!

அந்தத் தெளிவினுல் இறைவனைத் தெளியவேண்டும் என்பதற்காக 'ஞானக் கண்ணாலே காண்க' என்று மேற்கோளில் ஆசிரியர் கூறிக்கொண்டார்.

மேலும், தலைவனேடு சேர்ந்தபின், உயிரின் அன்புநிலை, ஞானக்கண் என்னும் பேருணர்வு நிலை அல்லது பெருந் தெளிவு நிலை. அதனுல் உயிரின் அறிவு நிலை, ஞானக் கண்ணேடு ஒத்ததாகாது. உயிர் தன்னைக் காணவும் உதவாது; தன் தலைவனைக் காணவும் உதவாது. (தொடரும்)

# இயற்கை ஓவியம் : மயிலாட்டம்-2

[புலவர் இரா. இளங்குமரன்]

முருகன், மலைச்செல்வன் மைந்தன்; மலைமடந்தை மகன்; மலைவாழ்நர் தலைவன்; மலைவேடர் மகள் வள்ளி மகிழ்நன்; மலை கிழவோன்! இப் **'பெரும் பெயர் முருகனை'** முருகாற்றுப்படை முடி நிலை, **'மலைகிழவோனே'** என்று மகிழும்!

குறிஞ்சிநிலக் கோமான் முருகன், பின்னே மருதநிலத்தும் பிறநிலத்தும் குடிகொண்டான். மருதத்து வேந்தன் தேவர் கோன்; அவன் மகளின் மணாளன் ஆனான் முருகன். வயலூர னும் ஆனான். ஆதலால் அவனை **'வயலூரா'** என்று அழைத்தார் அருணகிரியார்.

முருகனை வயலூரன் ஆக்கிய பின்னே, அவன் மயில் வய லூர்ந்து வாராமல் இருக்குமா? மயிலை வயல் நிலப்பறவை—மருத நிலப்பறவை—யாக்கி மகிழ்ந்தவர்களுள் தலைவர் **சாத்தனார்**. அம் மகிழ்ச்சியிலே அவர் ஒன்றுக்கு இரண்டு மயிலாட்டம் காட்டினார். மயிலை எந்நிலப் பறவை யாக்கினால் என்ன? தன்னிலை தவறுமா? குறிஞ்சிக் கபிலர் வழியிலே, மருதச் சாத்தனார்—**மதுரைச் சாத்தனார்**— சில வண்ணங்களைத் தீட்டினார்.

மயிலின் ஆட்டத்திற்கு வண்டு துளைத்த மூங்கிலைக் குழலாக் கினார் கபிலர். சாத்தரோ, வண்டுகளுள் ஒருவகையான தும்பி குழலிசைப்பதாகக் கூறினார்; கபிலர் காட்டிய மலைச்சாரல் அரங்கத் தைப், பொதும்பர் (சோலை) அரங்கம் ஆக்கினார் சாத்தர்.

பொதும்பு, இலையும் பூவும் காயும் கனியும் பொதும்பியுள்ள— செறிந்துள்ள—சோலை. சங்கச் சான்றோர் வாழ்ந்த **'பொதும்பில்'** மதுரையை அடுத்து அப் பெயராலேயே இன்றும் வழங்குகின்றது. பொதும்பின் இயல்பை எழில்பட இயம்புகிறார் சாத்தர்: **'வெயில்'** நுழைந்து அறியாது; அவ்வளவு செறிந்த பொதும்பில், என்ன நுழைகிறது? **'குயில்'** நுழைந்து வெளிப்படாது உறைகிறது. அக் குயிலியே, மயிலியின் ஆட்டத்திற்கு ஏற்ற இசைபாடும் செல்வி. கபிலர் காட்டிய வண்டினம் இங்கும் யாழ் மீட்டும்; மந்தி, கண்டு களிக்கும். இஃது ஓராட்டம்.[1] இன்னோராட்டம் வருமாறு:

---

1. **''பரிதியஞ் செல்வன் விரிகதிர்த் தானைக்
இருள்வளைப் புண்ட மருள்படு பூம்பொழில்**

ஒரு பொய்கை; அதில் பளிங்குநீர்; ஒரே பச்சிலைப் பரப்பு; அது தாமரை இலைப்பரப்பு; வளமான மலர்கள் நிரம்பியுள்ளன; அவற்றுள் ஓங்கி உயர்ந்ததோர் மலர்; அம் மலர்மேல் 'அரச அன்னம்' வீற்றிருக்கிறது. ஓங்கிய மலரில் அரச அன்னம் வீற்றிருந்தால், மற்றை மலர்களில் பிற அன்னங்கள் உள்ளன என்று நாம் கொள்ளவேண்டும்! இவர்களே பார்வையாளர்கள். கரைமேல் கலைமயில் கூத்து ஆடுகிறது; நீர்ப்பறவைச் சேவல் (கம்புட் சேவல்) பெருமுழா முழக்குகிறது. சோலைக்குயில் பாடுகிறது. இங்கே சாத்தனார் ஓர் அரசியைப் புதுவதாகப் படைத்துக் கொண்டார். பார்வையாளரை நாமே கருதவைத்தார். இவ்வாறு கபிலர் தீட்டிய வண்ண ஓவியத்தில் சில வனப்புக் கூட்டினார் சாத்தனார்.[2]

கபிலரும் சாத்தனாரும் வரைந்த இயற்கை ஓவியத்தில், தம் நெஞ்சம் பறிகொடுக்கிறார் **காவியக் கம்பர்.** அவரே மயிலாட்டம் ஆடவந்தார்போல மயங்கி நின்று, மற்றையோரையும் மயங்க வைக்கிறார். அவர் ஓர் அருமையான நாடக அரங்கத்தையே படைத்துக் காட்டுகிறார். "ஆயிரம் ஆண்டுகளின் முன்னரும் இன்று காணும் நிலையிலே ஆடலரங்கம் இருந்ததோ?" என ஐயுறுவோர், சிலப்பதிகாரம் வகுக்கும் அரங்கமைதியைக் காண்பரே ஆயின், மூக்கிலே விரலையூன்றி நோக்கத் தவறார்.

சாத்தர் காட்டிய சோலை அரங்கையே, நாட்டிய மேடையாக்கி மயில்களை ஆடவிட்டார் கம்பர். ஆனால், அதற்குமேல் நீள நினைந்து அரங்கை அழகு செய்கின்றார்.

ஆடல் அரங்கம் இருண்டுகிடந்தால் அழகாக இருக்குமா? இருள் விலக்க '**ஒளிவிளக்கு**' ஏற்றுகிறார்; விளக்கு, திரிவிளக்கா? தீவர்த்தி விளக்கா? இல்லை! எழில்மிக்க **குமிழ் விளக்கு!** செங்கதிர்

---

குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட
மழலை வண்டினம் நல்லியாழ் செய்ய
வெயில்நுழை பறியாக் குயில்நுழை பொதும்பர்
மயிலா டரங்கின் மந்திகாண் பனகாண்."

2. "மாசறத் தெளிந்த மணிநீர் இலஞ்சிப்
பாசடைப் பரப்பில் பன்மலர் இடைநின்
றொருதனி ஓங்கிய விரைமலர்த் தாமரை
அரச அன்னம் ஆங்கினி திருப்பக்
கரையின் றாலும் ஒருமயில் தனக்குக்
கம்புட் சேவல் கனைகுரல் முழவாக்
கொம்பர் இருங்குயில் விளிப்பது காணாய்."

—மணிமே. 4 : 1—13.

பொழியும் விளக்கும் வெண்கதிர் பொழியும் விளக்கும்! இவை செந்தாமரை, வெண்டாமரை என்பன. இவையும், இரண்டு மூன்றே? ஒளிவெள்ளமாகப் பொழியும் அளவு எண்ணற்றவை!

விளக்கேந்தும் நங்கையர் இல்லா வெறிச்சோடிய விளக்கு களோ இவை! தாமரைக் கொடியிடையார் தாமே, விளக்கேந்தும் 'விளங்கிழை'யாராகி நிற்கின்றனர்.

நீரையள்ளி நெடுவானில் பரவும் கருமுகில் 'கொண்டல்' ஆகும். நீரைத் தன்னிடத்துக் கொண்ட அக் கொண்டல்கள், ஒன்றோடு ஒன்று கூடுகின்றன; முட்டுகின்றன; மோதுகின்றன; 'இடிஇடி' என்று இடிக்கின்றன; 'திடுதிடு' 'திமுதிமு' 'கடகட' 'மடமட' 'குமுகுமு'—இப்படி எத்தனை எத்தனை ஒலிகள்! இவ் வொலிகள், பேரிகை முதலாம் தோற்கருவிகள் எல்லாம் கூடி ஒலிக்கும் கொள்ளை இன்பம் சேர்க்கின்றன.

வலிய கொண்டல் முழக்கின் இடைஇடையே எழுகின்றது யாழொலி. யாழ்வகை நான்கு; அவை, பேரியாழ், சகோடயாழ், மகர யாழ், செங்கோட்டியாழ் என்பன. இவற்றுள் 17 நரம்புகளைக் கொண்டது மகரயாழ்; மகரமீன் வடிவுடையது. மயில்களின் ஆடலுக்கு வண்டுகள் பண்செய்து பாடுதல், மகரயாழ் மீட்டுதல் ஆயிற்று. தேன் ஒழுகவிட்டால் போன்ற நரம்புகளில் இருந்து, தேன் ஒழுகுவது போல இசை எழுகின்றதாம்! இயலி ஆடும் எழில் கூத்துக்கு, இயல்பில் எழுந்த தேனிசை இது!

அரங்கச் சோலை பொய்கைக் கரையில் உள்ளது. பொய்கை ஆழமானது; நீர்ப்பெருக்கு மிக்கது. அலைமோதித் தாவுகிறது நீர். அலையை என்ன பெயரிட்டு அழைப்பர்? 'திரை' என்பர்; நீர்த் திரையை அரங்கத் திரை ஆக்குவது பொருத்தம்தானே! காட்சியை எடுத்துக் காட்டுவதும் திரை; காட்சிக்குக் கவின் சேர்ப்பதும் திரை!

நீர்த்திரை ஒன்றா? ஒருமுக எழினி பொருமுக எழினி, கரந்துவரல் எழினி எனச் சிலப்பதிகாரம் கூறும் மூவகைத் திரைகளும் நீர்த் திரையிலும் உண்டு. ஒரு கரையில் இருந்து மறுகரை வரை செல்லும் திரை, ஒருமுக எழினி; இருகரைகளில் இருந்தும் எதிர் எதிராக வந்து மோதி மீளும் திரை, பொருமுக எழினி; மேடைக் காட்சியைத் தன்னிடத்து வெளிப்படக் காட்டும் திரை, கரந்துவரல் எழினி; அரங்கத் திரையுடன் இத்தனை வகையும் பொருந்திய திரை பொய்கைத் திரை.

திரையாம் எழினியை 'இழுனி' என விளக்கும் கூத்தநூல். இழுத்து மூடித் திறப்பதால் இழுனி ஆயிற்று. எழில் பெறும்

ஓவியங்களுக்கு இடமாகி நிற்றலால் எழினி ஆயிற்று. இழுனி, எழுனியாகவும் இருத்தல் வேண்டும். எழினி இழுனியாகப் பயன் செய்யவும் வேண்டும். இதனால் நீர்த்திரை '**எழினி இழுனித் திரை**' யாகவே அமைகின்றது.

ஆடல் மகளிர் பலர்; விளக்குகள் பல; முழவுகள் பல; யாழ்கள் பல; திரைகளும் பல; இனிப், பார்வையாளரும் பலர் என்று கூறவேண்டுமோ? அப் பார்வையாளர்கள் எவர்? **செங்குவளைக் கண்ணரும், கருங்குவளைக் கண்ணரும்!** கூடியிருந்தோர் செங்கண்ணர்; தனித்திருந்தோர் கருங்கண்ணர்! இவர்கள் எப்படி நோக்குகின்றனர்? விரும்பி நோக்குகின்றனர்; விழித்து நோக்குகின்றனர்; இமை மூடின் இடைவெளிப்பட்டுப் போமே என ஏங்கி நோக்குகின்றனர். காதல் வயப்பட்டது நோக்கு; அந் நோக்கு இந் நோக்கு!

நோக்கர்கள் கூடியிருந்தென்ன? அரங்கத் தலைமை வேண்டாவோ? 'அவைக்குப் பாழ் அறிவறிந்த தலைமை இன்மை' ஆகலின் தலைமை வேண்டும். அத் தலைமை **மருதம்** என்பதே.

மருதம் என்பதை மருதன் என்போமோ? மருதி என்போமோ? **மருதி** என்பதே மரபு. 'நீராடுங் கடலுடுத்த நிலமடந்தை' என்பது மரபு வழிச் செய்தி. அம் மரபை மாற்றுதல் மாண்பன்று. ஆதலால், மயிலிகளின் ஆடல் அரங்கத் தலைமையை மருதியாம் அரசி ஏற்றுப் பொலிவுடன் வீற்றிருக்கிருள்!

மயிலிகளின் ஆட்டம் எப்பொழுது நடைபெறுகிறது? விளக்கேற்றும் பொழுது, எப்பொழுது? அப்பொழுது நடைபெறுகிறது; பொழுது விழும்பொழுதிலே ஆட்டம் தொடங்குகிறது. பேரொளி மறைந்து காரிருள் கப்பிக்கொள்ளக், கொண்டலும் கூடிக்கொண்டால் மயிலுக்கு எழுச்சியாட்டம் இயல்பாகக் கிளர்ந்து விடாதா? இப் பொழுதைக் கம்பர், '**தாமரை விளக்கிலே**' காட்டுதல் தனித் திறமையாகும்.

**தாமரை விளக்குகள், குவளைக்கண்ணர், கொண்டல் முழவம், திரை எழினி** என்பவை கம்பர் வழங்கிய கலைக்கொடை'கள். கபிலரில் பிறந்த காட்சி, சாத்தரில் வளர்ந்து, கம்பரில் சிறந்து திகழ்கின்றது. இடைஇடையே வண்ணக்கீற்றுகள் வரைந்தோரும் உளர். அவரும் நினைத்தற்கு உரியர்.

> **"தண்டலை மயில்கள் ஆடத் தாமரை விளக்கம் தாங்கக்**
> **கொண்டல்கள் முழவின் ஏங்கக் குவளைகண் விழித்து நோக்கத்**
> **தெண்டிரை எழினி காட்டத் தேம்பிழி மகர யாழின்**
> **வண்டுகள் இனிது பாட மருதம்வீற் றிருக்கும் மாதோ!"**

---

# பழந்தமிழில் மக்கட்பெயர்

[பன்மொழிப் புலவர், இரா. மதிவாணன்]

(சிலம்பு. ௫௯, பரல். க, ௯௨ ஆம் பக்கத் தொடர்ச்சி)

40 ஆதன்

ஆதன் என்பது சேரக்கிளை மரபின் குடிப்பெயராக இருந்தது. தொல்காப்பியம் (I,349:1), ஐங்குறுநூறு (1: 10-1), பதிற்றுப் பத்து (63:21), புறநானூறு (29, 154, 389) ஆகியவற்றில் இம் பெயர்ச்சொல் இடம் பெற்றுள்ளது.

பழங்காலத்தில் ஆதன் என்னும் சொல்லுக்குத் தலைவன், குடிமுதல்வன், பெரியோன் என்னும் பொருள்கள் இருந்தன. இன்றும் குடகுமொழியில் தலைவனை 'ஆத' என விளிக்கின்றனர்[1]. துளுமொழியினர் ஆண்களுக்கு ஆதப்ப எனப் பெயரிட்டு அழைக் கின்றனர். கன்னட நாட்டில் ஆதய்ய எனப் பெயர் பூண்டோர் உள்ளனர். கன்னட நாட்டில் ஆதபுர என்னும் ஊரும் இருந் ததைக் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. தமிழகத்தில் பல ஆத னூர்கள் உள.

அதியமான் நெடுமான் அஞ்சியை ஔவையார் 'ஆத' எனத் தலைமை குறித்த குடிப்பெயரால் மட்டும் விளிக்கிறார். குடிப் பெயரைத் தம் இயற்பெயருடன் சேர்த்துக்கொள்ளும் வழக்கத் தால், எத்துணைத் தலைமுறைகள் கழிந்தாலும், எத்துணை நூற் றாண்டுகள் உருண்டோடினாலும் இடம் பெயர்ந்து எத்துணைத் தொலைவில் வாழ நேர்ந்தாலும் தாம் ஒரே குடி வழி வந்தோர் என்னும் வரலாற்றுண்மையையும் இழையறாத மரபுவழி உறவும் பிணைப்பையும் காக்க முடியும் என்று அக்காலத் தமிழர் அறிந்திருந் தனர். சாதிப் பெயர்கள் புகுந்ததால் பழந் தமிழரின் குடிப்பெயர் கொடிவழி அற்றுப் போய்விட்டது. தமிழின வரலாற்றின் தனித் தன்மைகளைக் காணப் பழைய குடிப்பெயர்களை ஆய்வது இன்றி யமையாதது. அகராதி நிகண்டு ஆதன் என்னும் சொல்லுக்குப் பெருந்தகையாளன் என்று பொருள் கூறுகிறது. ஆதன் அழிசி, ஆதன் எழினி, ஆதன் ஓரி என்பவை குடிப்பெயர் முன்னும் இயற் பெயர் பின்னுமாக அமைந்தவை. நல்லாதன், சேரலாதன், வாழியாதன் என்பவற்றுள் ஈற்றிலுள்ள ஆதன் என்னும் குடிப் பெயர் முன் அடைகளோடு சேர்ந்து இயற்பெயராகவே வழங்கி வந்துள்ளது. ஆதன் என்னும் குடிப்பெயரை ஈற்றில் கொண்ட இயற்பெயரினர் இக் குடியின் நேர்வழியினர் என்றும் குடிப்பெயரை

---

1. குடகுமொழியில் வெளிவந்துள்ள 'பட்டோல பளமெ' என்னும் நூலினும் இச் சொல்லாட்சி எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

முன்னும் இயற்பெயரைப் பின்னுமாகப் புனைந்தவர் இக் குடியின் கிளைவழியினர் என்றும் கொள்ளலாமா என்பது மேலும் ஆய்தற் குரியது.

மலையாள அகராதியில் ஆதன் என்னும் சொல், புத்தத் துறவிகளைக் குறிக்கும் 'அர்ஹத' என்பதன் திரிபு என்று கூறப் பட்டிருப்பது சற்றும் பொருந்தாது. சேர மரபினர் அனைவரும் புத்த சமயத்தினர் அல்லர். ஆதன் என்னும் பெயரைக் கொண் டோர் தமிழகம் முழுவதிலும் பலர் இருந்தனர். தூய தமிழ்ப் பெயர்களின் பொருளறியாதவர்கள் விருப்பம் போல் விளக்கம் தரத் துணிகின்றனர்.

### 41. ஆதனுங்கன்

ஆதனுங்கன் புறநானூறு 175, 389ஆம் பாடல்களில் பாடப் படுகிறான். ஆதன் மரபில் தோன்றிய உங்கன் என்று இச் சொல் பொருள்படுகிறது. ஊங்கன் என்னும் பெயர் நெடு முதல் குறுகி உங்கன் என வழங்கியது. ஊங்கு = முன்பு, உணராவூங்கே (குறு.297). ஊங்கு - மேம்பாடு, கல்வியினூங்கில்லை (நீதி நெறி. 2) ஊக்கம் = மேம்படற்கான இயல்பு.

ஆதலால், ஊங்கன் - முன்வைத்தெண்ணப்படுபவன், மேம் பாட்டாளன் என்னும் பொருளில் இயற்பெயராக வழங்கி வந் துள்ளது. தூங்கும் இயல்பு தூக்கம், ஏங்கும் இயல்பு ஏக்கம் ஆனவாறு, ஊங்கும் (மேம்படும்) இயல்பு ஊக்கம் எனப்படுகிறது. ஊங்கு என்னும் சொல்லாட்சியும் பொருளுணர்வும் நாளடைவில் தமிழில் வழக்கிழந்து வரினும் துளுநாட்டில் உக்கப்ப(ன்) என ஆண்களுக்குப் பெயரிடும் வழக்கம் இன்றும் உள்ளது.

### 42. ஆதிமந்தி

தமிழிலக்கியங்களில் சோழன் கரிகால் வளவனின் மகளாகவும் ஆட்டனத்தியின் மனைவியாகவும் கூறப்படும் சோழ இளவரசி ஆதிமந்தியின் பெயர் பலர்க்கும் புதிராக இருந்து வந்துளது. ஒரு பேரரசனின் மகளுக்கு இரட்டுற மொழிவது போல் மந்தி என்னும் பெயர் அமைந்திருக்க முடியுமா என்பதே பலரும் தொடுக்கும் வினா.

திருவள்ளுவரின் தாய் ஆதி என்னும் பெயரினள் என்பர். தமிழக நாட்டுப்புறங்களில் 'ஆதி'யென்னும் பெயர் பூண்ட மகளிர் இன்றும் உள்ளனர். மாதன், மாதி, ஆதன், ஆதி என்னும் பெயர்கள் இயல்பாகக் காணப்படுபவை.

வடமொழிச் சொல்லான ஆதி என்பது பழைமை, தொடக்கம், முதன்மை எனப் பொருள்படுகிறது. தமிழ்ச் சொல்லான ஆது -

பெருமை, முதிர்வு, ஆக்கம், முன்னேற்றம் ஆகிய பொருள்களைத் தரும்.

**"ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை**
**ஆஅதும் என்னு மவர்."**

இக் குறளில் ஆது - ஆக்கப்பொருளில் வந்துள்ளது. ஆதாயம் என்னும் சொல்லை நோக்குக. ஆது என்பது வினை முதல். ஆ என்பது வேர்ச்சொல். ஆகு எனத் திரிந்து வழங்குவதும் இதுவே. (ஒ. நோ.) போது - போகு; போதுவன் - போகுவன்; போதல் - போகல், ஆதல் - ஆகல், ஆதும் - ஆகும்.

பெருமைக்குரியவரை, மூத்தவரை ஆக்கச் செயல்களுக்கு வழிகாட்டியாய் இருக்கும் சான்றோரை, தம்மைக் காத்து நலம் புரியும் அண்ணன், தந்தை போன்றோரை 'ஆத' என்று விளிப்பது பண்டைக் காலத் தமிழ் மரபு. பெருமைக்குரியவன், மூத்தவன் என்னும் பொருளில் ஆண் பிள்ளைக்கு 'ஆதன்' என்று பெயரிடுவதும், பெரியவள், பெருமைக்குரியவள், பெருமாட்டி, மூத்தவள் என்னும் பொருளில் பெண் குழந்தைக்கு 'ஆதி' எனப் பெயரிடுவதும் தொன்று தொட்டு வரும் மரபு. எனவே தமிழிலுள்ள ஆதி ஒரு பெண்பாற் பெயர். ஒரு குடும்பத்தில் மூத்த உடன் பிறந்தாள் ஆதி என்றழைக்கப்படுவதும் இயல்பானதே.

ஆதன் என்னும் சொல்லுக்குப் பெருமான், மதிப்பிற்குரியவன் என்று (Noble person) அகராதி நிகண்டு பொருள் கூறுவதால் ஆதி என்னும் சொல் 'பெருமாட்டி' எனப் பொருள் தரல் பொருந்துவதாகும்.

ஆ எனும் நெடுஞ்சுட்டும் காலத்தால் முன்மை சுட்டி ஆதன் ஆதி என வருதல் இயல்பு. ஆதன் - பழையவன், முன்னவன், மூத்தவன். ஆதி - பழையவள், முன்னவள், மூத்தவள்.

கன்னடத்தில் சேய்மைச் சுட்டாக வரும் ஆதன் (அவன்) என்னும் சொல் ஒப்பு நோக்கத்தக்கது. ஆண்டையது எனும் தமிழ் வழக்கும் காலத்தாலும் (ஆண்டு - வருடம்) இடத்தாலும் தொலைவிலுள்ளதைச் சுட்டுகிறது. எனவே, ஆதி - முன்னவள், மூத்தவள் என்று பொருள்படுவது தேற்றம். மந்தி என்னும் சொல் கன்னடத்தில் ஆட்களைக் குறிக்கும். ஆறுமந்தி என்றால் ஆறுபேர் என்று பொருள். மந்த, மாந்த, மாத என்னும் சொற்கள் துளுமொழியில் அனைத்தும், முழுதும், குழு என்று பொருள்படும். பார்ச்சி, கோண்டு, பெங்கோ ஆகிய திரவிட மொழிகளில் மந்த என்னும் சொல் ஆண்மகன், மாந்தன் என்று பொருள் தரும்.

மன் என்னும் சொல்லினடியாகப் பிறந்த மந்தன், மாந்தன், மாந்தர், மந்து என்னும் சொற்கள் தனிமகனையும் மக்கட் குழுவை

யும் குறிப்பன. தெலுங்கில் மந்தி மக்கள் தொகுதியைக் குறிக்கும். மன் என்னும் வேர்ச்சொல் நிலைபெறல், நிலை பெறுத்தல், காத்தல் என்று பொருள்படும். அதனாற்றான் மன்னன் காவலன் எனப் பட்டான்.

முன் - முந்து எனத் திரிவதுபோல் மன் - மந்து எனத் திரியும். 'மந்து' **என்னும் சொல்லுக்கு மன்னன் என்று பொருளிருப்பதை யாழ்ப்பாணத் தமிழகராதியில் காணலாம்.** அரசனுக்குப் பெண்பால் அரசி; மன்னனுக்குப் பெண்பால் மந்தி. மந்து - மன்னன். மந்தி - அரசி. வேந்தன் - வேந்து என்றாற் போல் மந்தன் (மாந்தன்) - மந்து எனப் பழங்காலத்தில் வழங்கி வந்தது. மாந்தரன், மாந்தரஞ் சேரல் இரும்பொறை என்னும் மன்னர் பெயர்களைக் காண்க. மாந்தனின் (அரசனின்) நகரம் மாந்தை எனப்பட்டது. மாந்தை - கோநகரம். இது சேரர்களின் தலை நகரங்களுள் ஒன்று.

சோழப் பேரரசர்களுள் மாந்தாதா (மந்தாதன்) என்னும் சோழனைப் பற்றி அறியாதார் இலர். இவன் புலியும் மானும் ஒரு துறையில் நீரருந்துமாறு அறநெறி தழுவி அரசோச்சியவன். மந்து + ஆத = அரசர்களுக்குத் தலைவன், கோவேந்தன் (சக்கர வர்த்தி).

மாந்தரஞ் சேரல் என்னும் பெயரில் மாந்தரன் என்பது அரச (மந்து) மரபினன் என்று பொருள் படுவதாகும். மன் என்னும் சொல்லிலிருந்து மந்து தோன்றியது. இம் மக்களெல்லாம் எங்கே செல்கிறார்கள் என்பதை இன்றும் வட ஆர்க்காடு மாவட்டத்தில் இந்த மனுவெல்லாம் எங்கே போகிறது (மனு - மக்கட் கூட்டம்) என வினவுகின்றனர்.

மாந்தன், மந்தன், மந்து என்பவை குழுவையும், குழுத் தலைவனையும், தனி ஆடவனையும் தொடக்கத்தில் குறித்தன. சிறப்பாக அரசனைக் குறித்த மந்து, அரசி என்னும் பொருளில் மந்தி என வழங்கியது. பெண்பால் கருதி, பெண் குரங்கை மந்தி என அழைக்கத் தொடங்கியபோது, மந்தி என்னும் சொல்லுக் கிருந்த அரசியென்னும் பழைய பொருள் வழக்கிழந்தது.

எனவே **ஆதிமந்தி என்னும் பெயர் மூத்த இளவரசி அல்லது அரசப் பெருமாட்டி எனப் பொருள் படுகிறது.** கரிகாற் சோழன் தன் மூத்த மகளுக்கு ஆதிமந்தி எனப் பெயரிட்டான். தெலுங்கரில் சில பிரிவார் தம் மூத்த மகனுக்கு ஆதிகான் எனப் பெயரிடுவதை இன்றும் காணலாம்.

———

# தில்லி பாச்சாத் தேவர்

[கவியோகி சுத்தானந்த பாரதியார்]

சிவகங்கை பெரிய அரண்மனை வரலாற்றுப் புகழ் பெற்றது. முத்து வடுகுநாதத் தேவர், சசிவர்ணத் தேவர், கோலாகலத் தேவர், வேலுநாச்சியார், பெரியமருது, சின்னமருது, வீரத் தேவர், ஊமைத்துரை, கட்டபொம்மு முதலிய வீறுபெற்ற வீரச் செம்மல்கள் கூடிப் படை நடத்திப் புறப்பகையைக் குமைத்த இடம் இதுவே. இங்கே பல அடுக்கு மாளிகைகள் உண்டு. என் சிறுவயதில் வேலுத்துரை என்பவர் என் பள்ளித்தோழர். அவருடன் ஆங்கிலம் படிக்க அடிக்கடி நான் அரண்மனைக்குச் செல்வேன். ஒருநாள் இரவு நெடுநேரம் ஆயிற்று—ஏனெனில் பழைய வீரர் கதைகளை தில்லி பாச்சாத் தேவர் பேசிக்கொண்டேயிருந்தார். நான் அன்றிரவு முழுதும் அங்கே தங்க நேர்ந்தது.

தில்லி பாச்சாத் தேவரே நாலுகோட்டை மறவர் சிங்கம். அவர் அன்புத் தங்கம். ஆள் எடுப்பாக, மிடுக்காக, துடுக்காக இருப்பார். சுமாரான உயரம், சுமாரான பருமன்; பிடிப்பிடியாகத் தசை திண்புற்றிருக்கும். மீசையில் வீரம் துடிக்கும். முகத்தில் மண்—மாண்பு விளங்கும். கண்ணில் கனல் பறக்கும். மூலத்தாறு வேட்டி, வெண்குடுத்துணி, அதன்மேல் சரிகை வேலைப்பாடு மிளிரும் வெல்வெட்டு அங்கி, தலையில் பட்டுக்குல்லா, காலில் சடாயுடன் அவர் நடந்து வருவது கண்ணைக் கவரும். அவர் முன் எல்லாரும் வாய்பொத்தி வணக்கமுடனே பேசுவர். அவரைப் பெரிய அரண்மனைத்துரை என்பர்.

தில்லி பாச்சாவுக்கு வீரவிளையாட்டுக்களில் விருப்பம் மிகுதி. கோயில் திருநாள்களில் வீரவிளையாட்டுக்கள் நடத்திக்காண்பிப்பார். பாரதம் முழுதும் நாடகம் போடச் செய்வார். அந்தக் காலம் சிவசாமி என்ற நாடகப் புலவன் இருந்தான். அவனைக் கொண்டு அரிச்சந்திரன், பாண்டவர் வனவாசம், நல்லதங்காள், சுந்தர காண்டம் முதலிய நாடகங்களை நடத்தச் செய்தார்.

தில்லிபாச்சா அரண்மனையில் வாள் வீச்சு, சுருள் கத்தி வீச்சு, சிலம்பம், மற்போர், இருப்புக்குண்டு சுழற்றல், விளறிக்கம்பு வீசுதல், ஈட்டி எறிதல், குதிரைப் பந்தயம் முதலிய பல பீம வேலைகளைச் செய்தே குளிப்பார். அரண்மனைக்குள் இராசராசேசுவரி கோயில் உள்ளது. அங்கே வழிபட்டே அவர் உணவு கொள்வது வழக்கம். உண்டபின் தமிழ்நூல்களைப் படிப்பது அவர் பழக்கம்.

அவர் இரவில் எனக்குப் பழமும் பாலும் தந்தார். உண்டு கொண்டே கதை கேட்டேன். அந்தக் கதையெல்லாம் வீராங்கனை, ஊமையன் சண்டை, தாமரைக்குளம் முதலிய நூல்களாக எழுதியுள்ளேன்; காண்க.

இரவு பத்துமணி; பத்துக் காவலர் தீவர்த்தி பிடித்து, எக்காளம் ஊதிப் பறைகொட்டி உட்களம் பார்த்து வந்தனர். வேலுத்துரையும் நானும் ஒதுக்கிடத்தில் நின்றுகொண்டிருந்தோம். காவலர் ''டடடடே யாரது, பிடிபிடி'' என்று வந்தனர். வேலுத்துரை 'டே மருது நில்' என்று அவர்களை நோக்கிச் சென்றார். அதற்குள் ஒரு காவலன் பசக்கென்று என்னைப் பிடித்து இழுத்தான்—நான் 'வேல் வேல்' என்று கூவினேன். வேலுத்துரை ''மருது இவர் என் பள்ளித் தோழர்'' என்றார்—அவர்கள் காதில் ஏறவில்லை—அவர்கள் என்னைப் பிடித்து இழுத்துக்கொண்டு தில்லிபாச்சா முன்னே நிறுத்தினர் - அதற்குள் வேலுவும் ஓடிவந்தார்.

**காவலர்:** மகராசா - புது ஆள் - பையன் - இருந்தாலும் புதுஆள்—

**தில்லி:** போங்கடா - உங்களுக்குப் புது ஆள் - எமக்குப் பழைய ஆள் - வேலுவுடன் படிக்கிறார் - நம்முடன் இருக்கிறார் - இனி இவர் எப்போதும் தடையில்லாமல் உள்ளே வரலாம் - நமது உத்தரவு—

**காவலர்:** மகராசா உத்தரவு - உட்களம் பார்த்து முடிந்தது.

***சிங்க மறவர் வாழும் சிவகங்கைச் சீமையடா***
***எங்கும் வளம் பெருகிப் பொங்கும் அமைதியடா***

என்று பாடிக்கொண்டே சென்றனர் காவலர்—எங்கும் அமைதி.

தில்லி பாச்சாத் தேவர் நல்ல காற்றோட்டமான இடத்தில் படுக்கைபோட்டு என்னை ஓய்வுகொள்ளச் செய்யுமுன் பேசினார்—

'ஐய நீர் தமிழிற் பாடுவீர் என்று அறிந்தேன். தெய்வ (சிகாமணி)ப் புலவர் சொன்னார். என் மனமெல்லாம் தமிழர் முன்னேற்றத்தில் உள்ளது. உண்ணும்போதும், உறங்கும் போதும் தமிழ், தமிழர், தமிழ்நாடு முன்னேற வேண்டும் எனக் கருதுகிறேன். நீர் தமிழுக்கு உணர்ச்சி வரும்படி கவி எழுதி எம்முன் பாடிக்காட்ட வேண்டும். நாம் உமது செலவெல்லாம் ஏற்போம்' என்றார்.

நான் ‘துரையே தமிழுக்கு வெற்றி முரசடிக்கிறேன். ஆனால் என் செலவுகளை நானே பார்த்துக்கொள்ளுகிறேன். உமது நெஞ்சுரத்தை எனக்குத் தாரும் போதும்’ என்றேன். அவர் ‘அஃது எமக்கு மரியாதையில்லை. நாம் தருவதை ஏற்கவேண்டும்’ என்று என் பாட்டுக்கு ஆடையணி, எழுதுகோல், நூல்கள், கனிகள், மலர்கள் எல்லாம் அளித்தார்.

காலை புலர்ந்ததும் தில்லி பாச்சா குதிரை ஏறி அரண்மனையைச் சுற்றி வந்தார் - பிறகு சிலம்பம், வாள் வீச்சு நடந்தன. எல்லாம் முடிந்ததும் என்னருகே வந்து நின்றார்.

‘‘இப்போது உடம்பு ‘கின்’ என்றிருக்கிறது. சோம்பலெல்லாம் வேர்வையாகக் கொட்டுகிறது. குளித்துக் களியுண்டால் கும்மென்று தசைகள் முறுக்கேறும். நீரும் அப்படிப் பயில்வான் ஆகவேண்டும்—ஆற்றல் மிகப் பெருகவேண்டும். வள்ளுவர் சொல்லுகிறபடி கூற்றையும் கூடி எதிர்க்கும் ஆற்றல் வேண்டும். அனுமான் எப்படிக் கடலைத் தாண்டினான்; தனித்துச் சென்று கணையாழி தந்து, இலங்கையைத் தீமூட்டினான். அனுமான் வீரம், இராமன் அறம், சீதை கற்பு, இலக்குவன் தொண்டு, பரதன் விரதம் - இவை வேண்டும் - கம்பனின் யுத்த காண்டமே எனக்குப் பிடித்தது.’ இந்திரசித்து போர் புரிந்ததை மளமளவென்று ஒப்பித்தார் தில்லிபாச்சா. நான் இந்தப் பாட்டைப் பாடினேன் :

*சிங்க நெஞ்சத் தமிழனே சிகரம் போல் எழுந்து வில்*
*திங்கராச ராச னாண்ட தொல்மரபில் வந்தனை*
*சேர சோழ பாண்டியரின் சீர்த்தியை விளைத்திடாய்*
*வீரவெற்றி வாகை சூடி மேதினியை ஆளுவாய்*
*ஆற்றலுக்குப் பஞ்சமோ அறிவினுக்குப் பஞ்சமோ*
*கூற்றுதைத்த சக்தி சிவனைக் கும்பிடுந் தமிழனே*
*ஊக்கமாக நட நட உழைப்பினால் உயர்ந்திடு.*
*நோக்கமோங்கி ஆக்க மோங்கி நூறாண்டுகள் வாழ்ந்திடு !*

அவர் மீசைமுறுக்கி ‘சவாசு’ என்று தட்டிக் கொடுத்தார். அந்த மீசைக்கு ஒரு பாட்டு வந்தது.

*வீரம் வீரம் வீர மென்றே மீசை முறுக்கித் தலைநிமிர்ந்தே*
*நேரந்தன்னைப் பொன்னாக்கி நேர்மையான கடமைசெய்*
*அச்சப்பேய்கள் அஞ்சிடவே ஆண்மைகொண்டு முன்னேறி*
*உச்சக்குரலில் ஓதிடுவோம் உலகம் தமிழர் உரிமையென்றே*
*சிங்கக் கூட்டம் போலவாருங்கள்*
செருக்களத்தில் வெற்றிகாணுவோம்.

சங்கமாகக் கூடிவாருங்கள்—ஓம்
சக்திசக்தி என்று முன்செல்வோம்.

தில்லிபாச்சா இந்த மாதிரிப் பாடல்களை மிகவும் விரும்பினர். நாடகங்களிலும் அவற்றைப் பாடச் செய்தார். நான் பாடிய தமிழுணர்ச்சிப் பாடல்கள் முன்னேற்ற முழக்கத்தில் உள்ளன.

அவர் சங்ககாலப் பண்பாட்டையே போற்றினர். சங்க நூல்களை நிரம்பக் கற்றுச் சங்கக் கருத்துக்களைத் திருக்குறளுடன் இணைத்து மகிழ்ந்தார்.

ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே
சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே.
.......... .......... .......... ..........
களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே.

என்ற பொன்முடியார் வரிகளை அடிக்கடி சொல்லுவார்.

"கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்."

என்ற குறளைச் சிந்தித்து அப்படிப் போர் புரிந்தே நாட்டுரிமை பெறவேண்டும் என்று முண்டாவைக் காட்டி மீசையைத் திருகி விடுவார். தில்லிபாச்சாவுடன் ஒருவாரம் இருந்தால் அலியும் ஆண்மைகொண்டு வீரத்தோள் புடைத்துப் போர்முரசு கொட்டித் தாவுவான். அவரிடம் அந்தக் காலப் புரட்சி வீரர் இரவில் வருவதுண்டு. சிதம்பரம் பிள்ளை சிவகங்கைக்கு வந்த போதெல்லாம் தில்லிபாச்சாவைப் பார்த்துப் பேசியதுண்டு. அந்தக் காலப் புரட்சி வீரரை அவர் போற்றினர். நாடுமுழுதும் திருக்குறள் ஆட்சி வேண்டினர் தேவர். தெய்வ (சிகாமணி)ப் புலவர், இராசகுரு; அவரிடம் அவர் திருமந்திரம் பாடம் கேட்டார். ஒருநாள் சமயப்பேச்செழுந்தது.

ஆன சமயம் அதுஇது நன்றுஎன்னும்
மாய மனிதர் மயக்கம் அதுஒழி
கானங் கடந்த கடவுளை நாடுமின்
ஊனங் கடந்த அருஅது ஆமே.

என்ற திருமந்திரத்தைப் பல மேற்கோள்களுடன் ஒருமணிநேரம் விளக்கினர் புலவர். "ஆட்களைச் சுற்றி எழும் மனிதச் சமயங்கள் மக்களிடையே பிரிவினைச் சுவரெழுப்பிவிட்டன. அது இது என மயங்குகின்றனர் அறியா மக்கள். ஒருமதம் மற்றொன்றைக் குறை கூறுகிறது. ஊனுருப் பெயர்களைக் கடந்து கானமான சத்தமும்

கடந்து ஞானமயமான அருவான ஒன்றை அவரவர் உள்ளக் கோவிலில் உணர வேண்டும். உள்ளமே கோயில், தூய சீவனிற் சிவம் உள்ளது - சிவன் மனமாயை ஒழிந்து சிவமய மாதலே இன்பம். அதற்குச் சரியை கிரியை யோக ஞானம் ஆகிய நான்கும் சாதனங்கள்'' என்று விளக்கினுர். தில்லிபாச்சா ஒரு கவியே பாடிவிட்டார்.

உள்ளமே கோவில் உணர்வே கடவுள்
ஊனங் கடந்த ஞானமே இன்பம்
உள்ளே இன்பமும் உடலில் வீரமும்
தள்ளுக வாழ்வு துலங்குக நன்றே.

தெள்ளு தமிழை அள்ளிப் பருகித் துள்ளித் துடிக்கும் வீரச் செம்மல் தில்லிபாச்சா வாழ்க!

---

## தமிழ்ப்பகை வெல்லடா!

[பாவலர் தமிழ்க்குமரன், ஈரோடு.]

“வண்ணத் தினைமாவைத் தெள்ளியே'' என்ற காவடிச்சிந்து மெட்டு

எல்லாம் தமிழென்று சொல்லடா!—உன்
ஏற்றம் அதிலென்று வில்லடா!—பின்
ஏது குறையுனக்கு விள்ளடா—தமிழா!
எனவோதிய பெரும் பாவலன்
எழிலார் தமிழ்ப் புலவேந்தனை
ஏத்தி அவன்வழிச் செல்லடா!—நமை
எத்தும் தமிழ்ப்பகை வெல்லடா!

பொல்லா மொழிஇந்தி யில்லையோ—அதைப்
போற்றி வளர்த்தல்தீ தில்லையோ!—நம்
பொன்னுர் தமிழ்மொழி கொல்லவோ!—இனிப்

பொறுக்காதுளம் தமிழா! உடன்
புலியாகெனப் புகன்றேமொழி
போற்றி வளர்த்தவன் சொல்லவோ?—புலிப்
போத்தவன் பாவேந்தனல்லனே!

## வெள்ளி, பொன் முதலிய விழாக்கள் அமைந்த முறை

மேலை நாட்டினர் வெள்ளிவிழா (Silver Jubilee), பொன்விழா (Golden Jubilee), வைரவிழா (Diamond Jubilee) என்று 25 ஆண்டு, 50 ஆண்டு, 60 ஆண்டு நிறைவுகளைக் கொண்டாடுகின்றனர். அந்தப்படி நம் இந்திய நாட்டிலும் விழாக்கள் கொண்டாடப் பெறுகின்றன.

பொதுவாகச் சிறப்புடைய நிறுவனங்களுக்கும், சிறப்புடைய பெருமக்களுக்கும் விழாக்கள் கொண்டாடப் பெறுகின்றன. ஆனால் அவை எந்த முறையைப் பின்பற்றி அமைக்கப் பெற்றிருக்கின்றன என்பது அறிய வேண்டுமன்றோ ?

முதற்கண் அம்பலவாணர் ஆடிய மன்றங்கள் ஐந்தோடு விழாக்களை ஒப்பிட்டுக் காண்போம். ஓவியம், செப்பு (தாமிரம்), வெள்ளி பொன், மணி என்ற பெயருடைய மன்றங்கள் தென்றமிழ் நாட்டிலிருந்து தொடங்கி முறையே அமைந்திருப்பது மகிழ்ச்சிக்குரியது. திருக்குற்ருலத்தில் ஓவிய மன்றமும், திருநெல்வேலியில் செப்பு (தாமிரம்) மன்றமும், மதுரையில் வெள்ளி மன்றமும், தில்லை (சிதம்பரம்) யில் பொன் மன்றமும், திருவாலங்காட்டில் மணி மன்றமும் உள்ளன என்பதறிவோம். இவற்றில் ஓவியம் தவிர மற்ற நான்கும் மாழை (உலோகம்) களைக் குறிக்கின்றன. அவற்றில் செப்பு நீக்கி வெள்ளி, பொன், மணி ஆகிய மூன்றும் விலைமதிப்புக் கேற்றபடி 25, 50, 60 ஆண்டு நிறைவு விழாக்கட்கு முறையே அமைக்கப்பெற்றிருக்கின்றன. இங்கே ஒன்று தோன்றுகிறது. செப்பும் ஒரு மாழைதானே. அதைக் கொண்டும் திருவுருவங்கள் சமைக்கப் பெறுகின்றனவே. அதனால் அதனை 20 ஆண்டு நிறைவு விழாவுக்கு ஏன் வைத்துக்கொள்ளக் கூடாது ?

தனித்தமிழ்த் தந்தை மறைத்திரு மறைமலையடிகளார் தாம் தொடங்கிய பொதுநிலைக் கழகம் (சமரச சன்மார்க்க சங்கம்) 20 ஆண்டு நிறைவு விழாவைச் சிறப்பாகக் கொண்டாடியது குறிப்பிடத்தக்கதாகும். அதற்குச் 'செப்புவிழா' அல்லது 'செம்பொன் விழா' என்று பெயர் சூட்டலாமன்றோ ?

பெரும்நிறுவனங்கள் மேலும் புகழோடு சிறப்பாக நடைபெறுவதற்குப் பொதுவாக ஆண்டு நிறைவு விழாக்களும், பெருமக்கள் தாங்கள் மேலும் நலத்தோடும் புகழோடும் நீடு வாழ்வதற்கும் இறை வாழ்த்தோடு அன்பர் அறிஞர் பெருமக்கள் வாழ்த்துக்களைப் பெறுவதற்கும் வெள்ளிவிழா, பொன்விழா, மணிவிழா முதலியனவும் நடத்தப் பெறுகின்றன.

**யாக்கை நிலையாமை**

***சாற்றக் கேண்மின்! சாற்றக் கேண்மின்!***
***மனிதர்க்கு வயது நூறல்ல தில்லை,***
***ஐம்பது இரவில் அகலுந் துயிலினுல்***
***ஒட்டிய இளமையில் ஓரைந்து நீங்கும்***
***ஆக்கை—இளமையால் ஐம்மூன்று நீங்கும்***
***எழுபது போகமிக் கிருப்பன முப்பதே***
***அவற்றுள்,***
***இன்புறு நாளுஞ் சிலவே அதாஅன்று***
***துன்புறு நாளுஞ் சிலவே ஆதலால்***
***பெருக்கா றொத்தது செல்வம் பெருக்காற்று***
***இடிகரை ஒத்தது இளமை; இடிகரை***
***வாழ்மரம் ஒத்தது வாழ்நாள்.***

***—கபிலரகவல்***

யாக்கை நிலையாமையைக் கருதியே மக்கட்கு விழாக்கள் அமைக்கப் பெற்றன என்று சொல்வது மிகையாகாது.

மேலும் 20 ஆண்டு நிறைவைக் குறிப்பதற்குச் 'செப்பு' அல்லது 'செம்பொன் விழா' என அமைக்கலாம் என மேலே கூறியது மிகவும் பொருத்தமாகும். அடுத்து 25 ஆண்டு நிறைவினைக் குறிக்கும் வெள்ளிவிழாவுக்கும் 50 ஆண்டு நிறைவினைக் குறிக்கும் பொன் விழாவுக்கும் இடைவெளி 25 ஆண்டுகள் இருப்பதால் உலகப் பொதுமறையாம் திருக்குறளில் தெய்வப் புலவர் திருவள்ளுவர் (மெய்கண்ட சாத்திரத்தில் 36 தத்துவங்களைக் குறிப்பதாக வுள்ளதை) 'மெய்யுணர்தல்' என்னும் தலைப்பிலே 36 ஆவது அதிகாரமாக அமைத்திருப்பதால் கழகம் 36 ஆவது ஆண்டு நிறைவினை 'மெய்யுணர்தல் விழா' என்று 1957 இல் நடத்தத் திட்டமிட்டது. ஆனல் மறைமலையடிகள் விருப்ப ஆவண (Will) வழக்கு அப்பொழுது நடைபெற்றமையால் விழா நடத்த இயலாமற் போயிற்று.

ஆனல் 1960 இல் மறைமலையடிகள் மாணவரும் கழக நூலாசிரியருமான தவத்திரு அழகரடிகள் மெய்கண்ட சாத்திர பாடம்

நடத்திய பிறகு மெய்யுணர்வு விழாவினைச் சென்னைக் குருசாமி முதலியார் உயர்நிலைப்பள்ளியில் சிறப்புற நடத்தியது மிக்க மகிழ்ச்சியளித்தது.

அதன்பின் 50 ஆண்டு நிறைவினைக் குறிக்கும் பொன் விழாவும் 60 ஆண்டு நிறைவினைக் குறிக்கும் மணி விழாவும் நடைபெறுவது பொருத்தமே. மணிவிழாவுக்கும் 80 ஆண்டு நிறைவினைக் குறிக்கும் முத்துவிழாவுக்கும் இடைவெளி 20 ஆண்டுகள் இருப்பதால் 75 ஆண்டு நிறைவினைப் பவளவிழா எனக் கொண்டாடுதல் பொருத்தம் என்று தோன்றவே கழக ஆட்சியாளரின் 75 ஆண்டு நிறைவினைக் கழகம் பவளவிழாவாகக் கொண்டாடியது. அதனை இப்போது சிலர் பின்பற்றுகின்றனர்.

பொன்னுக்கும் முத்துக்கும் இடைப்பட துகிர் (பவளம்) வருவது கருதத்தக்கது.

> "பொனனும் துகிரும் முத்தும் மன்னிய
> மாமலை பயந்த காமரு மணியும்"

என்னும் புறநானூற்று 218 ஆம் பாட்டிலே இஃது உணர்த்தப் பெறுகிறது.

பவளத்திற்குப்பின் முத்து வருவதால் 80 ஆண்டு நிறைவினை 'முத்துவிழா' என்று கொண்டாடுவதே சாலப் பொருத்தமாகும். ஆனால் அதனைச் சிலர் 'வைரவிழா' என்று பெயர்வைத்துக் கொண் டாடுகின்றனர். மேலைநாட்டினர் 60 ஆண்டு நிறைவினை வைர விழாவாகக் கொண்டாடுவது மேலே தெரிவிக்கப்பெற்றுள்ளது.

மேலும் அப்பர் அடிகள் அருளிய,

> *"அப்பன்நீ அம்மைநீ ஐயனும்நீ*
> *அன்புடைய மாமனும் மாமியும்நீ*
> *ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும்நீ*
> *ஒருகுலமும் சுற்றமும் ஓரூரும்நீ*
> *துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய்நீ*
> *துணையாய்என் நெஞ்சம் துறப்பிப்பாய்நீ*
> *இப்பொன்நீ இம்மணிநீ இம்முத்துநீ*
> *இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே!"*

என்ற திருப்பாட்டில் பொன், மணி, முத்து என்று முறைப்படுத்தி யிருப்பதால் மணிவிழாவுக்குப் பின்னர் முத்துவிழாவைக் கொண் டாடுதல் வேண்டும் என்பது பெறப்படுகிறது.

ஆயின், புறநானூற்றில் கூறியபடி மணிவிழாவுக்கும் முத்து விழாவுக்கும் இடையில் 75 ஆவது ஆண்டு நிறைவினைப் 'பவள விழா' எனக் கொண்டாடுவது முரண்பாடாகாது.

மேலே கூறியபடி 20, 25, 36, 50, 60, 75, 80 ஆகிய ஆண்டு நிறைவுகளைச் செம்புவிழா, வெள்ளிவிழா, மெய்யுணர்வு விழா, பொன்விழா, மணிவிழா, பவளவிழா, முத்துவிழா என முறை யாகக் கொண்டாடுவது சாலப் பொருத்தமாகும்.

80 ஆண்டுக்கு மேல் நடத்தப்பெறும் விழாக்களை ஆண்டு எண் குறிக்கப்பெற்ற நிறைவு விழாக்களாக நடத்தலாம். அந்த முறையில் நிறுவனங்கட்கும் பெருமக்களுக்கும் நூற்றாண்டு விழாக்கள் நடைபெறுகின்றன. இங்கே ஒன்று குறிப்பிடத்தக்கது. பெருமக்களுக்கு நூறாண்டு வாழ்வு நிறைவுற்றபோதும், நூறாண்டு நிறைவுறுமுன்பு அவர்கள் மறைந்தாலும் நூறும் ஆண்டு வரும் போது நூற்றாண்டு விழா நடத்துவது மரபாயிருக்கிறது. காலஞ் சென்ற மதிப்பிற்குரிய தமிழகத் தந்தை பெரியார் அவர்கட்கு அண்மையில் நூற்றாண்டு விழா நடந்ததும், மூதறிஞர் இராசாசி அவர்கட்கு வரும் திசம்பரில் நூற்றாண்டு விழா நடைபெற இருப் பதும் குறிப்பிடத் தக்கனவாகும்.

ஆனல் நிறுவனங்கள் நூற்றாண்டுக்குள் மறைந்து விட்டால் அப்படி நூற்றாண்டுவிழா நடத்துவதில்லை. அவை நூறாண்டு நிறையும்போது நிலைத்திருந்தால் மட்டுமே நூற்றாண்டுவிழா நடை பெறும்.

மேற் குறிப்பிட்ட விழாக்களில் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு வரும் கொண்டாட வேண்டுமென்பது கட்டாயமில்லை. அவரவர்கள் தகுதிக்கும் பண்புக்கும் பொதுமக்களின் விருப்பத்துக்கும் ஏற்றபடி இயன்றவர் மட்டுமே கொண்டாடுதல் ஏற்புடையதாகும்.

அவ்விழாக்களை நடத்தும்போது பெருமக்கள் அவ்விழாவின் நினைவாகச் சில அறக்கட்டளைகளை நிறுவுவதும் உண்டு.

—வ. சு.

# முத்தமிழ்க் காவலர் வாழ்க!

தமிழ் மொழி வளர - தமிழ் மக்கள் வாழ - தமிழகம் செழிக்க - தமிழ் மருத்துவம் சிறக்க-கடந்த 60 ஆண்டுகட்கு மேலாகத் தமிழ்த் தொண்டாற்றிவரும் முத்தமிழ்க் காவலர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களின் 80 ஆம் ஆண்டு வைரவிழா இத் திங்கள் 10 ஆம் நாள் தொடங்கி 30 ஆம் நாள் முடிய நடைபெறுகிறது.



முத்தமிழ்க் காவலர் அவர்கள் இளமை முதல் தமிழ் - தமிழ் நாடு - தமிழ் இனம் ஆகியவற்றின் நலங்கருதிச் சுயமரியாதை இயக்கத்திலும், நீதிக்கட்சி, திராவிடக் கழகம் ஆகிய குமுகாய, அரசியல் இயக்கங்களிலும் பெரிதும் ஈடுபாடு கொண்டு உழைத்தவர். சிறந்த பேச்சாளரும் எழுத்தாளருமாவார். அனைத்துக்கும் மேலாகத் தமிழின மேம்பாட்டில் அசையாத பற்றுக் கொண்டவர். சமயப்பற்றும், சீர்திருத்தநாட்டமும் கொண்டவர். தமிழகப் புலவர் குழுவினை அமைத்துத் தமிழ்ப் பெரும் புலவர்களைப் போற்றி வரும் முத்தமிழ்க் காவலராகவும் திகழ்கிறார்.

திருக்குறள் கருத்துக்களைப் பரப்புவதிலும், திருவள்ளுவர் ஆண்டினைச் செயல்முறைப்படுத்துவதிலும் மிக்க ஆர்வமுடையவர். இவர் தமிழகத்தில் இந்தி திணிக்கப்படும்போதெல்லாம் வீறு கொண்டெழுந்து அதனை எதிர்த்து வருவது நாடறிந்த செய்தியாகும்.

அனைத்திந்திய வானொலியில் தமிழ் நிகழ்ச்சிகள் குறைக்கப்பட்டும், பழக்கப்பட்ட தமிழ்ச் சொற்களுக்கு மாறாகப் பிறமொழிச் சொற்கள் திணிக்கப்பட்டும் வந்ததை இவர் மிக வன்மையாகக் கண்டித்தார். வானொலி என்று சொல்லப்படுவதை விடுத்து 'ஆகாஷ்வாணி' என்று அழைக்கப்படுவதை மாற்றத் தமிழ்ப்

பற்றுடைய பலர் முயன்றும், நடுவண் அரசினர் அதனைப் பொருட் படுத்தாதிருந்ததைக் கண்டு மனம் பொருத நம் முத்தமிழ்க் காவலர் 1959 இல் அதற்கென ஒரு தனிக் கிளர்ச்சியே நடத்தி அதனால் சிறை ஒறுப்பினை ஏற்றதையும் தமிழ் நன்மக்கள் அறிவர்.

இத்தகைய மாண்பினரின் வைரவிழாக் கண்டு மகிழ்கிறோம். அவர்கள் நூற்றாண்டு விழாவும் கண்டு தொடர்ந்து தமிழுக்குத் தொண்டாற்ற எல்லாம் வல்ல இறைவன் அருள் புரிவானாக என எமது உளமார்ந்த வாழ்த்தினைத் தெரிவித்துக்கொள்வதோடு முத்தமிழ்க் காவலரின் சீரிய தமிழ்த் தொண்டினைப் பற்றித் தமிழ்ப் பெரும் புலவர்களும் அறிஞர்களும் வழங்கியுள்ள வாழ்த்துரைகளைக் கீழே தருகிறோம். வாழ்க முத்தமிழ்க் காவலர் !

## வாழ்த்துக்கள்

### தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர்

[பெரும்புலவர் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை.]

பண்டு மதுரையிற் சங்கமிருந்து தமிழாய்ந்த வரலாற்றை நாம் ஏட்டிற்கண்டு இன்புறுகிறோம். இப் பழைமையைப் புதுக்க நினைந்து, முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் திருச்சிராப்பள்ளியில் புலவர் குழுவை அமைத்து, தகுதி வாய்ந்த இந்நாள் தமிழ்ப்புலவர்கள் இருந்து தமிழ் ஆயத் தம் பொருட் செலவில் வசதிசெய்தவர். இச் செய்தி நாடறிந்த நற்செய்தி.

நாடறிந்த இந் நற்றமிழ் வள்ளல், தம் எண்பதாம் அகவையை எய்தியதை முன்னிட்டு நிகழும் இவரது வைர விழாவைக் கொண்டாடும் வாய்ப்பை நாம் பெற்றுள்ளோம்.

'தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர்' எனப் பலரும் பாராட் டும் சிறப்புக்குரிய இப் பெரியார் தமிழைப் பரப்ப, பெரும்புகழ்க்குரிய தம் குடும்பத்துடன் ஒக்கலும் மக்களும் உயர்தமிழ்ப் புலவர் குழுவும் உவந்து பாராட்ட, எல்லாம்வல்ல இறைவன் திருவருளால் இன் னும் பல்லாண்டு நல்வாழ்வு வாழ்கவென எண்பத்து மூன்றும் அகவையினை எய்தியுள்ள யான் மனமொழி மெய்களாற் சிந்தித்து வாழ்த்தி வந்திக்கின்றேன்! செந்தமிழ்ச் செல்வியும் இவ் வைர விழா வாழ்த்தினிற் பங்கு கொள்வதைப் பெரிதும் பாராட்டு கின்றேன்.

பொலிக பைந்தமிழ் போற்றும் புலவர்கள் !

## இன்னும் நீடு வாழியவே!

[பேராசிரியர், பைந்தமிழ்ப்பாவலர் அ. கி. பரந்தாமனுர், எம். ஏ.]

[பன்னிருசீர் விருத்தம்]

1. திருச்சி நகரம் தந்தவள்ளல்
சிறந்த இனிய பேச்சாளர்
திறமை சான்ற எழுத்தாளர்
நேர்மை மிக்க நெறியாளர்
பெரிய செயல்கள் பலவற்றைப்
பிறங்க நடத்தும் வல்லாளர்
பெருமை சான்ற தமிழகத்தின்
புலவர் குழுவை நிறீஇயதை
இருப தாண்டாய்த் திறமையுற
இயக்கி வருநற் பேராளர்
எங்கள் விசுவ நாதமவர்
இன்னும் நீடு வாழியவே!

2. நந்தம் அமுதத் தமிழ்மொழியும்
நாடித் திணிக்கும் இந்தியினுல்
நலியா வாறு வீரமுடன்
தடுக்க எதிர்த்துப் போராட,
இந்த நாட்டு மாணவர்கள்
இனிது கற்று முன்னேற
எழிலார் திருச்சி நன்னகரில்
இயற்றி நடத்தும் பெரும்பள்ளி
முந்தி நின்று நனிவிளங்க
முன்னேர் செய்த அறம்பலவும்
மேன்மை யுற்று நடந்துவர
மிகுந்த தொண்டு செய்திடவே
இந்நாள் எண்ப தாண்டுற்ற
எங்கள் விசுவ நாதமவர்
இன்னும் நீடு வாழியவே!
இனிதாய் நலமாய் வாழியவே!

3. புலவர் வேந்தர் பெருவழுதி,
பிறர்க்கே வாழ்வார் இருப்பதனல்
பொலிவுற் றுளதிவ் வுலகென்றார்;
பொதுநூல் அளித்த வள்ளுவரும்
உலகம் என்றும் பண்புடையார்
உறலால் அழியா தென்றுரைத்தார்;
உயர்ந்தோர் இவ்வா றுரைத்ததற்கோர்
உறுநற் சான்ருய் வாழ்ந்துவரும்
கலைமா மணியாம் முத்தமிழ்நற்
காவல ராகும் வள்ளுவவேள்
கவினுர் தமிழும் தமிழ்நாடும்
காக்க நீடு வாழியவே!
நலமாய் விசுவ நாதமவர்
தம்நன் மனைவி மக்களுடன்
நவிலும் உலகில் நீடூழி
நம்பன் அருளால் வாழியவே!

## இளமை நலத்தோடு நீடு வாழ்க!

[கொண்டல் சு. மகாதேவன், எம்.ஏ., பி.எஸ்சி]

முத்தமிழ்க் காவலர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் என்றும் இளமைத் துடிப்போடு தமிழ்நாடும் ஏடும் சிறக்கப் பாடு பட்டு வருகின்றவர். நாட்டின் நலம் கருதித் தந்தை பெரியாருடன் இணைந்து நின்று எத்துணையோ போராட்டங்களில் பங்கேற்றுப் பாராட்டப் பெற்றவர். தமிழகப் புலவர் குழுவின் வரலாற்றுச் சிறப்புமிக்கதொரு கூட்டத்தினைத் திருச்சி மறைமலை அடிகளார் மன்றத்தில் 2-2-1975 அன்று கூட்டி பல்லாண்டு காலமாகத் தந்தை பெரியார் அவர்கள் எடுத்தாண்டு வற்புறுத்தி வந்த சீர் திருத்த எழுத்துருவங்களை ஆய்ந்து ஏற்று நடைமுறைப்படுத்த வழிகாணச் செய்தவர். எண்பது ஆண்டு இனிது நிறையப் பெறும் அத்தகைய அருந்தமிழ்ப் பெருமகனாரின் வைர விழா வினைக் கொண்டாடுவதில் தமிழகம் பேருவகை எய்துகிறது. நாடும் மொழியும் தழைக்க அவர்கள் என்றும் இளமை நலத்தோடு நீடூழி வாழ்க என உளங்கனிந்து வாழ்த்துகின்றேன்.

———

# செய்திகளும் குறிப்புக்களும்

## தொடர் வண்டித் துறையில் இந்தித் திணிப்பு

"அடுத்த 5 ஆண்டுக் காலத்தில் தொடர் வண்டித் துறையின் எல்லா அலுவல்களையும் இந்தியிலேயே நடத்தத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. அதன் முதல் நடவடிக்கையாகத் தொடர் வண்டித் துறை ஊழியர் பயிற்சியில் இந்தியும் ஒரு பாடமாக வைக்கப்படும்'' என்று நடுவணரசின் அமைச்சர் மது தாண்டவாடே அவர்கள் 21—10—78 இல் தொடர் வண்டித் துறை ஆய்வுக் குழு வொன்றில் பேசியபோது குறிப்பிட்டார்.

## சங்ககால நடுகற்கள்

கோவை மாவட்டம் சத்திய மங்கலத்திற்கு அருகில் உள்ள வின்னம்பள்ளியில் சங்க காலத்தைச் சேர்ந்த நடுகற்கள் இரண்டும், பிற்காலப் புலிக்குத்திக் கல் ஒன்றும் ஆக மூன்று நடுகற்கள் உள்ளன. இவற்றைக் கூகலூர் வரலாற்றுப் பேரவையினர் அண்மையில் கண்டு பிடித்தனர். இவையே தமிழ் நாட்டில் முதன் முதல் கிடைத்துள்ள சங்ககால நடுகற்கள் என்று கூறப்படுகின்றன.

## 'பெரியார் புகழ் நூறு' வெளியீட்டு விழா

புதுச்சேரி குறள்நெறி மன்றத்தின் சார்பில் 1—10—78 இல் திரு சேதுராமன் இல்லத்தில் பெரியார் நூற்றாண்டு விழாவும், புலவர், தி. நா. அறிவுஒளி க. மு. அவர்கள் எழுதிய 'பெரியார் புகழ் நூறு' என்ற நூல் வெளியீட்டு விழாவும் நடைபெற்றன. 'பெரியார் புகழ் நூறு' முதல் நூலைப் புலவர் அரிமதி தென்னகன் வெளியிட திரு. வ. தாயுமானவன் பெற்றுக் கொண்டார். புலவர் பெருமக்கள் பலர் பாராட்டுரை வழங்கினர்.

## திருமந்திரம் தொடர் வகுப்புக்கள்

சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தின் சார்பில், சென்னை முல்லாசாகிபு சந்து 1 ஆம் எண்ணுள்ள இடத்தில், செவ்வாய், புதன் கிழமைகள் தோறும் மாலை 6-30 மணிக்கு வாழ்வியல் புலவர் சொ. ர. தென்மொழியார் அவர்களால் திருமந்திரம் தொடர் வகுப்பு நடைபெறும்.

## நடுவணரசின் மொழிக் கொள்கை இதுதானோ !

தில்லித் தலைநகரில் காவல்துறையினரிடம் கொடுக்கப்பெற்ற முறையீட்டுக் கடிதமொன்று இந்தியில் எழுதப்படாமல் ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்ததால் அஃது ஏற்றுக்கொள்ளப்படாமல் மறுக்கப் பட்டதாம். இதுதான் நடுவணரசு பின்பற்றும் இருமொழிக் கொள்கை போலும்! இந்தி பேசாத மக்கட்கு மட்டும் மும்மொழிக் கொள்கை வேண்டுமாம்.

## வள்ளலார் இல்லம்-நினைவுச் சின்னமாக்கல்-வேண்டுகோள்

"வள்ளலார் பிறந்த இடமான மருதூர், உறைந்த இடங்களான சென்னை, கருங்குழி, வடலூர், மேட்டுக்குப்பம் ஆகிய 5 இடங்களில் வடலூர் இடமும், மேட்டுக்குப்பத்திலுள்ள இடமும் பொது இடங்களாக உள்ளன. மருதூர், சென்னை, கருங்குழி ஆகிய ஊர்களிலுள்ள இடங்கள் தனியாரிடமே உள்ளன. இவற்றுள் கருங்குழி வீட்டை விலைக்கு வாங்கித் திருப்பணி செய்து வடலூர் வள்ளலார் தெய்வ நிலையங்களின் பொறுப்பாட்சியில் சேர்க்கும் பணியினைத் தொடங்கியுள்ளோம். எனவே, அன்பர்கள் தங்களால் இயன்ற காணிக்கையினைச் செலுத்திப் புகழ் புண்ணியங்களைப் பெற வேண்டுகிறோம். ரூ 100/-க்கு மேல் காணிக்கை செலுத்துவோர் பெயர் கல் வெட்டில் இடம் பெறும். ஏனையோர் பெயர் பின்னர்த் தனி நூலில் இடம் பெறும்" என வடலூர் ஊரன் அடிகள் ஒரு வேண்டுகோள் விடுத்துள்ளார்.

## 'சிற்பச் செந்நூல்' வெளியீட்டு விழா

தமிழக அரசின் நுண்கலைக் கல்வித்துறையினரால் உருவாக்கப்பட்ட 'சிற்பச் செந்நூல்' என்னும் நூல் வெளியீட்டு விழா 2—11-78ல் சென்னையில் நடைபெற்றது. மகாபலிபுரம் சிற்பக் கலைக் கல்லூரித் தலைவர் வி. கணபதி ஸ்தபதி அவர்கள் கோயிற் கட்டிடக்கலை பற்றித் தொகுத்த இவ்வரிய நூலைத் தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள் வெளியிடப், பேரறிஞர் அண்ணா நுண்கலைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் திரு. பி. சிவலிங்கம் அவர்கள் பெற்றுக்கொண்டார்கள். மதுரை காமராசர் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் வி. சி குழந்தைசாமி விழாவிற்குத் தலைமை தாங்கினார். டாக்டர் ஆர். நாகசாமி, சா. கணேசன், கணபதி ஸ்தபதி ஆகியோர் உரையாற்றினர்.

## திருவள்ளுவரின் 2009 ஆம் ஆண்டுவிழா

தெய்வப் புலவர் திருவள்ளுவரின் 2009 ஆம் ஆண்டு விழாவினைத் தமிழரின் தனிப் பெருந் திருநாளான பொங்கலை யொட்டியும், பெங்களூர்த் தமிழ்ச் சங்க 29 ஆம் ஆண்டு விழாவினை யொட்டியும், பெங்களூர் தமிழ்ச் சங்கத்தினர் 10 நாள்கள் சிறப்புடன் கொண்டாட முடிவு செய்துள்ளனர். இவ் விழாவினையொட்டி மாபெரும் ஊர்வலம், குறள் பொருட்காட்சி, பல கலை நிகழ்ச்சிகள், வள்ளுவர் சிலைநாட்டு விழா ஆகியனவும் நடத்தத் திட்டமிட்டுள்ளனர்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் பரல்-உ, கூடுஆம் பக்கத் தொடர்ச்சி)

| | |
|---|---|
| உயர்திரு வ. சுப்பையா பிள்ளை அவர்கள் (கழக ஆட்சியாளர்—அக். 78) | ரூ. 10 00 |
| ,, ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் (கழக மேலாளர்—அக். 78) | ரூ. 5 00 |
| ,, D. N. கோவிந்தசாமி, ஆசிரியர் புதுப்பேட்டை நகரி | ரூ. 5 00 |

# மதிப்புரை

## சென்னை மாநகர்

[ஆசிரியர் : மா. சு. சம்பந்தன் தமிழர் பதிப்பகம். 243 லிங்கி செட்டித் தெரு, சென்னை-1. விலை: ரூ. 10 00]

தமிழகத்தின் தலைநகரான சென்னை இந்தியாவின் பெரிய நகரங்களுள் நான்காவது சிறப்பிடம் பெறுவது. இந்நகரின் வரலாறு சுவை மிக்கது. இதனைத் தொகுத்தளிப்பதே இந்நூல். முன் வந்த பதிப்பைவிட மூன்று மடங்கு பக்கங்களுடைய இப்புதிய பதிப்பு பயனுள்ள புதிய செய்திகளைத் தாங்கியுள்ளது.

சிறு குப்பமாக இருந்த சென்னை வெள்ளையர் ஆட்சிக்குட்பட்ட பின் வளர்ந்த வரலாறு நூலின் முற்பகுதியில் பல்வகைச்சான்று களுடன் விளக்கப்பெற்றுள்ளது. நடுப்பகுதியில் நகர் வளர்ச்சி என்ற தலைப்பில் பல்வேறு கல்வி, பொது நிறுவனங்களும் அமைந்த வரலாற்றைக் கூறுகின்றது.

இறுதிப் பகுதி 'சென்னையின் சிறப்பு' என்ற தலைப்பில் சென்னைக்குச் சிறப்புத் தேடித்தரும் முக்கியமான இடங்களைப் பற்றிய செய்திகளைத் தருகினறது.

இஃது ஒரு நல்ல வரலாற்று நூல்; பயணிகளுக்குப் பயனுடைய வழிகாட்டி நூல்; சென்னையின் சிறப்பைக் கூறும் வரலாற்றுக் களஞ்சியம். பல்வேறு புள்ளி விவரங்களுடன் நீண்டநாட்களாகக் கிடைக்காமலிருந்த இந்நூலை எளிய இனிய நடையில் சுவையும் பயனும் தரத்தக்க வகையில் உருவாக்கி வெளியிட்டுள்ள நூலாசிரியரின் முயற்சி பாராட்டத்தககது.

## ஆவியுலகம்

[ஆசிரியர் : திருமதி ஆயிசா கணபதி. சிவலிங்க நூற்பதிப்புக் கழகம், ஈரோடு. விலை ரூ 4-90.]

ஆவி என்பது ஒன்று உண்டு என்பார் சிலர்; அஃது இல்லை யென்பார் வேறு சிலர். இவ்விரு சாரார் கருத்துக்களையும், தக்க மேற் கோள்களோடு எடுத்துக்காட்டி இறுதியில் ஆவியும், ஆவியுலகும் இருப்பது மெய் என்பதை நிறுவுகிறுர் இந் நூலாசிரியர். ஆவிகளைப் பற்றி அறிய ஆர்வ முடையோர் இந் நூலைப் படிக்கலாம்.

## தனித்தமிழ்

[ஆசிரியர் : க. தமிழமல்லன். கிடைக்குமிடம்: சை. சி நூற்பதிப்புக் கழகம், 79 பிரகாசம் சாலை, சென்னை-1. விலை உரூபா 4.]

பிறமொழி கலவாமல் தமிழ் தனித்தியங்க இயலாது எனக் கருது வோர்க்கு நல்லறிவூட்டும் வகையில் தனித்தமிழ் இயக்கத்தின் மாண்பு, இன்றியமையாமை ஆகியவற்றைத் தக்க மேற்கோள் களுடன் விளக்கும் இந் நூலாசிரியரின் தொண்டு பெரிதும் பாராட் டத்தக்கது.

---

*திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 80, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.*
*ஆசிரியர் : வ. சுப்பையா.*

### கழக நிலையங்களில் கிடைக்கும்

## பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| சிற்பச் செந்நூல்—கணபதி ஸ்தபதி (படங்களுடன்) | 75 | 00 |
| கம்பன்கண்ட உலகியல்—புலவர் க. அரசுமணி | 6 | 00 |
| வாழ்விக்கவந்த தெய்வம்—கோவி. மணிசேகரன் | 6 | 25 |
| தமிழாய்வு-தொகுதி-7—டாக்டர் சி. பாலசுப்பிரமணியம் | 10 | 00 |
| குறுந்தொகை திறனாய்வு—சோ. ந. கந்தசாமி | 6 | 00 |
| மும்மடங்கு பொலிந்தன—மு. மு. இசுமாயில் | 9 | 00 |
| கவிபாடிய காவலர்கள்—புலவர் செந்துறைமுத்து | 6 | 50 |
| நீரிழிவ நோயாளிக்கு வாழ்க்கை முறைகள் —டாக்டர் இ. எஸ். எஸ். இராமன் | 12 | 00 |
| 20 ஆம் நூற்றாண்டில் தமிழ் உரைநடை வளர்ச்சி —டாக்டர் மா. இராசமாணிக்கம் | 12 | 00 |
| சங்க இலக்கியம்—டாக்டர் இரா. தண்டாயுதம் | 13 | 50 |
| கோடி கொடுத்த கொடைஞன் —பேராசிரியர் குழந்தைநாதன் | 8 | 00 |
| தமிழ் நாவல் 50 பார்வை—இரா. இராஜசேகரன் | 6 | 50 |
| குறள்கண்ட நாடும் வீடும்—டாக்டர் தே. ஆண்டியப்பன் | 15 | 00 |
| தீவுகள் கரையேறுகின்றன—தமிழன்பன் | 5 | 00 |
| ஆயிரம் எண்ணங்கள் உதயம்—தாமரை மணாளன் | 12 | 00 |
| கம்பனும் மில்டனும் ஒரு புதிய பார்வை —டாக்டர் எஸ். ராமகிருஷ்ணன் | 15 | 00 |
| தெய்வத்தின் குரல் (இரண்டாம் பாகம்) தொகுப்பு | 30 | 00 |
| விளையாட்டு அமுதம்—எஸ். நவராஜ் செல்லையா | 3 | 50 |
| விஞ்ஞான வேடிக்கைகள்—ஆழி. வே. ராமசாமி | 2 | 40 |
| சென்னைமாநகர்—மா. சு. சம்பந்தன் | 10 | 00 |
| இந்திய நீதிக் கதைகள்—அ. லெ. நடராஜன் | 5 | 25 |
| சுருதேவர் இராமகிருஷ்ணர் வரலாறு ,, | 15 | 00 |
| சுவாமி விவேகாநந்தரின் அருள்மொழிகள் ஆயிரம் —அ. லெ. நடராஜன் | 8 | 25 |
| சிலம்பில் அவலம் —கா. முத்துச்சாமி, எம்.ஏ., ஆ. முத்தையா, எம்.ஏ. | 8 | 50 |
| மண்ணில் விண் அல்லது வள்ளுவர் கூட்டுடமை —தேவநேயப் பாவாணர் | 12 | 00 |
| Collected Papers—Dr. V. S. P. Manickam | 15 | 00 |
| Islam, Indian Religions and Tamil culture —S. M. Sulaiman, M. M. Ismail | 8 | 00 |

பதிவு எண் : M. 4899



அப்பர் அச்சகம், சென்னை-1.